



கணபதி துணை.

# யாப்பருங்கலக்காரிகை

## மூலமும் - உரையும்.



### பாயிரம்.

சந்தமடிவில்கடிமலர்ப்பிண்டிக்கண்ணார்நிழற்கீழ்
எந்தமடிகளிணையடியேத்தியெழுத்தசைசீர்
பந்தமடிதொடைபாவினங்கூறுவன்பல்லவத்தின்
சந்தமடியவடியான்மருட்டியதாழ்குழலே.

என்பது காரிகை. நூலுரைக்குமிடத்து நூற்பெயரும், காரணமும், ஆக்கியோன்பெயரும், அளவும், பயனும், உரைத்துரைக்கற்பாற்று. அற்றேல், இந்நூலென்ன பெயர்த்தோவெனின், பாளித்தியமென்னும் * பாகதவிலக்கணமும், பிங்கலமென்னுஞ் சந்தோபிசிதமும் போலக் காரிகையாப்பிற்றாய்க், குணகாங்கியமென்னுங் கருநாடகச்சந்தமேபோல மகடூஉமுன்னிலைத்தாய், அவையடக்கமுமுடையதாய், மயேச்சுரர் யாப்பேபோல உதாரணமெடுத்தோதி, இசைத்தமிழ்ச்செய்யுட்டுறைக்கோவையேபோலவும், அருமறையகத்தட்டகவோத்தின் வருக்கக்கோவையேபோலவும், உருபாவதாரத்திற்கு நீதகச்சுலோகமேபோலவும், முதனினைப்புணர்த்திய விலக்கியத்ததாய், வேதத்திற்கு நிருத்தமும், வியாகரணத்திற்குக்காரிகையும், அவிநயர்யாப்பிற்கு நாலடி நாற்பதும்போல யாப்பருங்கலமென்னும் யாப்பிற்கங்கமாய், அலங்காரமுடைத்தாகச் செய்யப்பட்டமையால், யாப்பருங்கலக்காரிகையென்னும்பெயர்த்து. இந்நூல் யாதுகாரணமாகச் செய்யப்பட்டதோவெனின், பண்டையோருரைத்த தண்டமிழ்யாப்பிற் கொண்டிலாதகுறியினோரைக்குறிக்கொளுவுதல் காரணமாகவும், தொல்லைப்பனுவற்றுணிபொருளுணர்ந்த நல்லவையோரை நகுவிப்பது காரணமாகவுஞ் செய்யப்பட்டது. இந்நூல் யாவராற்செய்யப்பட்டதோ வெனின். ஆரியமென்னும் பாரிரும்பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப்பெருந்தன்மை அமுதசாகரரென்னு மாசிரியராற்செய்யப்பட்டது. இந்நூலெவ்வளவைத்தோவெனின், இயல்வகையான்மூன்றும், காரிகைவகையா னாற்பத்துநான்கும், இந்தவ

---

* பாகதமென்பது—வடமொழிச்சிதைவு.

சையாற் றெண்ணூறுகிரந்தமு மிருபத்தெட்டெழுத்துமெனக் கொள்க. அவற்றுள், ஒருகிரந்தமாவது எற்றொழித்து-உயிரும் உயிர்மெய்யுமாகிய முப்பத்திரண்டெழுத்தாமெனக்கொள்க. அவற்றுள், நேரசைமுதலாகிய காரிகை இருபதொன்றும், நிரையசைமுதலாகியகாரிகை யிருபத்துமூன்றுமெனக்கொள்க. நேரசைமுதலாகிய காரிகையொன்றினுக்கு எழுத்தறுபத்துநான்கும் நிரையசைமுதலாகிய, காரிகையொன்றினுக்கு எழுத்தறுபத்தெட்டுமெனக்கொள்க. இவ்விருதிறமுங்கூட்டியுறழ இரண்டாயிரத்துத் தொளாயிரத்தெட்டெழுத்தாமெனக்கொள்க. நேரசைமுதலாகியகாரிகை யொற்றொழித்தோரடிக்கெழுத்துப்பதினாறும், நிரையசைமுதலாகிய காரிகையொற்றொழித்தோரடிக்கெழுத்துப் பதினேழுமெனக்கொள்க. என்னை" அடியடிதோறுமைஞ்சீராகி முதற்சீர்நான்கும் வெண்டளைபிழையாக், கடையொருசீரும் விளங்காயாகி, நேர்பதினாறே நிரைபதினேழென், றோதினர்கலித்துறை யோரடிக்கெழுத்தே,, என்றாராகலின். இந்நூலாற் பயன்யாதோவெனின் - யாப்பாராய்தல்பயன். யாப்பாராயவே-பா- தாழிசை- துறை - விருத்தங்களாலாகப்பட்ட அறம்பொருளின்பம் வீடென்னுமவற்றின் மெய்ம்மையறிந்து விழுப்பமெய்தி இம்மை மறுமை வழுவாமனிகழ்வாராதலின் இருமைக்குமுறுதிபயப்பதியாப்பெனக்கொள்க, யாப்பெனினும், பாட்டெனினும், தூக்கெனினும், தொடர்பெனினும், செய்யுளெனினு மொக்கும். என்னை" யாப்பும், பாட்டுந்தூக்குந் தொடர்புஞ் செய்யுளை, நோக்கிற்றென்ப நுணங்கியோரே. என்றாராகலின். இந்நூல் உறுப்பியலும, செய்யுளியலும், ஒழிபியலுமென மூவகைப்படும். அவற்றுள் - இவ்வியலென்ன பெயர்த்தோவெனின், எழுத்தும், அசையும், சீரும், தளையும், அடியும், தொடையும், என்னும் ஆறுறுப்பினையு முணர்த்திற்றுதலான் உறுப்பியலென்னும்பெயர்த்து. இவ்வியலுள், இத்தலைக்காரிகை என்னுதலிற்றோவெனின் தற்சிறப்புப்பாயிர முணர்த்துதனுதலிற்று. என்னை" வணக்கமதிகாரமென்றிரண்டுஞ்சொல்லச், சிறப்பென்னும் பாயிரமாம்,, "தெய்வவணக்கமுஞ் செய்யப்படுபொருளு, மெய்தவுரைப்பது தற்சிறப்பாகும், என்றாராகலின். கந்தமடிவில்-தாழ்குழலேல், எ-து. முருகுவிரியுமொய்ம்மலர்சோகின்கீழிருக்கும் அருகனதடிவணங்கி, எழுத்தும், அசையும், சீரும்-தளையும், அடியும், தொடையும், பாவும், பாவினமுமாமாறுரைப்பன் தளிர்புரையுஞ் சிறுமெல்லடித்தளகெடுங்குழற்றையலாய்-எ-று இஃது பொழிப்புரையெனக்கொள்க. என்னை'பொழிப்பெனப்படுவது பொருந்தியபொருளைப், பிண்டமாகக்கொண்டுரைப்பதுவே,, என்றாராகலின் கந்தமடிவில் - இணையடியேத்தி-எனவணக்கஞ்சொல்லப்பட்டது. எழுத்தினங்கூறுவனென வதிகாரங்கூறப்பட்டது, "வழிபடுதெய்வவணக்கஞ்செய்து, மங்கலமொழிமுதல் வகுத்தெடுத்துக்கொண்ட; இலக்கண

விலக்கிய, மிடுக்கணின்றியினிதுமுடியும்,, என்பவாகலின் ஈண்டுவணக்கஞ்செய்யப்பட்டது. இனிஎழுத்துமுதலாகிய எட்டனையும், காரணக்குறியான்வழங்குமாறு. என்னை "எழுதப்படுதலி னெழுத்தேயவ்வெழுத்தசைத்திசைகோடலி னசையேயசையியைந்து, சீர்கொளநிற்றலிற் சீரேசீரிரண்டு, தட்டுநிற்றலிற்றளையேயத்தளை, யடுத்துநடத்தலி னடியேயடியிரண்டு, தொடுத்தன் முதலாயின தொடையேயத்தொடை, பாவிநடத்தலிற் பாவேபாவொத், தினமாநடத்தலி னினமெனப்படுமே, எனவரும், பந்தமெனினும், தளையெனினுமொக்கும். என்னை "பகுத்தெதிர்நிற்றலிற்பந்தந்தளையென, வகுத்தனர்மாதோ வண்டமிழோரே,," என்றாராகலின். பலலவத்தின்சந்தமடியவடியான் மருட்டிய தாழ்குழலே-எ-து. மகடூஉமுன்னிலை. ஏகாரம்-ஈற்றசை. (க)

## அவையடக்கம்.

தேனார்கமழ்தொங்கன்மீனவன்கேட்பத்தெண்ணீரருவிக்
கானார்மலயத்தருந்தவன்சொன்னகன்னித்தமிழ்நூல்
யானடாத்துகின்றேனென்றெனக்கேநகைதருமால்
ஆனாவறிவினவர்கட்கென்னாங்கொலென்னுநகரவே.

இ-கை. நூலினது பெருந்தன்மையும், ஆசிரியரது பெருந்தன்மையும், தனதுள்ளக்குறையு முணர்த்திய முகத்தான் அவையடக்கமுணர்த்துற்று.

இ-ள். தேனிறைந்தமணங்கமழ்கின்ற வேப்பமாலையைத்தரித்த பாண்டியன்கேட்கத், தெளிந்த அருவிநீரையுடைய சந்தனச்சோலைசூழ்ந்த பொதியமலையி லெழுந்தருளியிருக்கின்ற அரியதவத்தினையுடைய முதலாசிரியராகிய அகத்தியமுனிவரால் அருளிசெய்யப்பட்ட அழிவின்றி நிலைபெற்றமுத்தமிழுள் இயற்றமிழின்கூறுகிய யாப்பிலக்கணநூலையானும், அவாவினால் எனது புல்லிய நாவைக்கொண்டு சொல்லத்தொடங்கினேன் இது அறிவிலியாகிய எனக்கேநகையினை விளைக்குமாயின், குறைவில்லாத அறிவினையுடையவர்க்கு யாதாகுமோ-எ-று. ஏ-அசைநிலை. இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது - யானடாத்துகின்றேனென்பதற்கு வேறுபொருள் கூறுவாருமுளர். (உ)

சுருக்கமில்கேள்வித்துகடீர்புலவர்முன்யான்மொழிந்த
பருப்பொருடானும்விழுப்பொருளாம்பனிமாலிமயப்
பொருப்பகஞ்சேர்ந்தபொல்லாக்கருங்காக்கையும்பொன்னிறமாய்
இருக்குமென்றிவ்வாறுரைக்குமன்றேயிவ்விருநிலமே.

இ-கை. புலவரதுசிறப்புணர்த்திய முகத்தான் அவையடக்கமுணர்த்துற்று.

ளை-குறினெடிலளபெடையு யிருப்புயிர்மெய், வலியமெலியவிடைமையோடாய்தம்-இ-உ-ஐ- யென்மூன்றன்குறுக்கமோ - டப்பதின்மூன்றுமசைக்குறுப்பாகும்-என்றார். காக்கைபாடினியாருமெனக்கொள்க. இனிமூவுயிர்க்குறுக்கமும்-அளபெடைகளுமாமாறுசொல்லுதும். அவற்றுட்குற்றியலுகரம்வருமாறு. நெடிற்கீழும்-நெடிலொற்றின்கீழும்-குறிலிணைக்கீழும்-குறிலிணையொற்றின்கீழும் - குறினெடிற்கீழும்-குறினெடிலொற்றின்கீழும்-குற்றொற்றின்கீழுமென் றிவ்வேழிடத்தாறுவல்லெழுத்தினையு மூர்ந்துஉகரம்வந்தால்-அதுகுற்றியலுகரமென்று வழங்கப்படுமெனக்கொள்க. என்னை நெடிலேகுறிலிணை குறினெடிலென்றிவை யொற்றொடுவருதலொடு குற்றிறுதியென் -றேழ்குற்றுகரக்கிட னென மொழிப - எழுவகையிடத்துங்குற்றியலுகரம-வரூஉமின்றி வரூஉம்வலலாரூர்ந்தே என்றாராகலின் வ - று. நாகு - காசு - காடு - காது - காபு- காறு-எனநெடிற்கீழாறு வல்லெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம் வந்தவாறும் - நாக்கு - சாச்சு- காட்டு - காத்து - காப்பு· காற்று-எனநெடிலொற்றின்கீழாறு வல்லெழுத்தினையுமூர்ந்துகுற்றியலுகரம்வந்தவாறும்-வரகு - முரசு - முருடு-மருது-துரபு - கவறு-எனக்குறிலிணைக்கீழாறுவல்லெழுத்தினையு மூர்ந்துகுற்றியலுகரம்வந்தவாறும்- அரக்குபொரிச்சு தெருட்டு குருத்து பொருப்புசிரற்று எனக்குறிலிணையொற்றின்கீழாறுவல்லெழுத்தினையுமூர்ந்துகுற்றியலுகரம்வந்தவாறும்-அசோகு பலாசு மலாடு செடாது புகாபு விராறு எனக் குறினெடிற்கீழாறு வலலெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறும்-நமாக்கு தடாச்சு பனாட்டு கடாத்து புதாப்பு விராற்று எனக்குறினெடிலொற்றின்கீழாறு வலலெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறும்- அக்கு கச்சு கட்டு கத்து கப்பு கற்று எனக்குற்றொற்றின்கீழாறு வலலெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறுங்காண்க. இனிக்குற்றியலுகரம அறுவகைப்படு மென்பாருமுளர். அவையாவன-ஈரெழுத்தொருமொழி· உயிர்த்தொடர்மொழி இடைத்தொடர்மொழி ஆய்தத்தொடர்மொழி வன்றொடர்மொழி மென்றொடர்மொழிஎன்றிவைஎன்னை-ஈரெழுத்தொருமொழி யுயிர்த்தொடரிடைத்தொட ராய்தத்தொடர்மொழிவன்றொடர்மென்றொடராயிருமூன்றே யுகரங்குறுகிடன்என்றாராகலின். இனிக்குற்றியலிகரம்வருமாறு உகரந்திரிந்துந்திரியாதும்யகரமோடியைபின்கண்வந்த இகரங்குற்றியலிகரமென்று வழங்கப்படும். என்னை வல்லெழுத்தாறொடெழுவகைபிடத்து முகரமணையாம் யகரமோடியையி னிகரமுங்குறுகு மென்மனார்புலவர் யகரம்வரும்வழியிகரங்குறுகு முகரக்கிளவிதுவரத்தோன்றாது என்றாராகலின். வ-று. நாகியாது காசியாது காடியாது காதியாது காபியாது காறியாது எனவரும் ஒழிந்தனவுமிவ்வாறேயொட்டிக்கொள்க. இனித்திரியாதுவந்த குற்றியலிகரம்வருமாறு கேண்மியா சென்மியாவெனக்கொள்க. என்னை குற்றிய லிகரநிற்றல் வேண்டும் யாவென்சினைமிசை யுரையசைக்கிளவிக் காவயின்வரூஉம

கரமூர்ந்தே" என்றாராகலின். இனி ஐகாரக்குறுக்கத்திற்குச் சொல்லுமாறு அளபெடுத்தற்கண்ணும், தனியே சொல்லுதற்கண்ணு மன்றியல்லாதவழி வந்தவைகாரந்தன்னளவிற்சுருங்கி ஒன்றரைமாத்திரையும், ஒருமாத்திரையுமாகக் குறுகுமெனக்கொள்க. அவைகுறுகுமிடத்து மொழி முதலிடைகடையென மூன்றிடத்துங்குறுகும். என்னை "அளபெடைதனியிரண்டல்வழி-ஐ-ஔ, வுளதாமொன்றரை தனிமையுமாகும்" என்றாராகலின். (வ-று.) ஐப்பசி மைப்புறம் மடையன் இடையன் குவளை தவளை திணை பனை என முதலும,இடையும் கடையுங்குறுகிய வாறுகண்டுகொள்க என்னை "மொழிமுதலிடை கடை யெனமூன்றிடத்து மையாகாரங்குறுகும்மே" என்றாராகலின இனி அளபெடைக்குச்சொல்லுமாறு அளபெடை யிரண்டுவகைப்படும் உயிரளபெடையும், ஒற்றளபெடையுமென. என்னை" உயிரளபெடையு மொற்றளபெடையுமென், றாயிரண்டென்பவளபெடைதாமே" என்றாராகலின். அவற்றுள் உயிரளபெடைக்குச்சொல்லுமாறு உயிருள் நெட்டெழுத்தேழு மளபெடுக்கும். அவையளபெடுக்குமிடத்து ஐகாரம் இகரத்தோடும் ஔகாரம் உகரத்தோடும் அளபெடுக்க ஒழிந்தனவுந் தமக்கினமாகிய குற்றெழுத்தோடளபெடுக்குமெனக்கொள்க. என்னை குன்றிசைமொழிவயி னின்றிசைநிறைக்கு, நெட்டெழுத்திம்பரொத்த குற்றெழுத்தே" ஐ ஔ வென்னுமாயீரெழுத்திற், கிகரவுகர மிசைநிறைவாகும் " என்றார், தொல்காப்பியனார். அவைநான்கிடத்தும் வந்தளபெடுக்கு என்னை தனிநிலை முதனிலை யிடைநிலையிறுதியென, நால்வகைப்படூஉ மளபாய்வருமிடனே" என்றாராகலின், (வ-று) ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஐஇ ஓஒ ஔஉ என இவையேழுந் தனிநிலையளபெடை-ஆஅரிடம் ஈஇரிலை ஊஉரிடம் ஏஎரிகள் ஐஇயவி ஓஒரிகள் ஔஉவியம்- என இவையேழுமுதனிலையளபெடை படாஅகை பரீஇயம் கழூஉமணிபேஎரம் வளைஇயம் புரோஒசை அநௌஉகம் என இவை யேழுமிடைநிலை யளபெடை. கடாஅ. குரீஇ, கழூஉ. மிலேஎ. கடைஇ, அரோஒ, அநௌஉ. என இவையேழு மிறுதிநிலையளபெடை. உயிரளபெடை எழுத்துநோக்கவேழாம். இடநோக்கநான்காம. எழுத்துமிடமு முறழ்ந்துநோக்க விருபத்தெட்டாமெனக்கொள்க. இனிஒற்றளபெடைக்குச் சொல்லுமாறு. ஒற்றுகளுள் ஙஞணநமன வயலளவாய்தமென்னும் பதினொன்றும், குறிற்கீழும், குறிலிணைக்கீழும் வந்தளபெடுக்கு மெனக்கொள்க. என்னை ஙஞணநமன வயலளவாய்த, மெனுமிவையீரிடத்தள பெழுமொரோவழி" வன்மையொடுரஃகான் ழஃகானொழிந்தாக், கன்மையாய்த மோடளபெழுமொரோவழி "என்றாராகலின். வ-று. மங்ங்கலம் மஞ்ஞ்சு மண்ண்ணு பந்ந்து அம்ம்பு மின்ன்னு தெவ்வ்வர் வெய்ய்யர் செல்ல்க கொள்ள்க எஃஃகு எனக்குறிற்கீழ்ப் பதினொொற்று மளபெழுந்தவாறுகண்டுகொள்க. ரங்ங்கம் முரஞ்ஞ்சு முரண்ண்டு பருந்ந்து அரும்ம்பு முரன்ன்று குரவ்வ்வை அவ

ய்யர் குரால்கள் கிரன்ன்கள் வாஃஃஃகு எனக்குறி லிணைகீழ்ப்பதி ஞேரொற்று மளபெடுக்கவாறுகண்டுகொளக. இவ்விருபத்திரண்டுபுள்ளியளபெடையுஞ் செய்யுளகத்தல்லது * பரவைவழக்கினுள் வாராவெனக்கொள்க. என்னை மாத்திரைவகையாற்றளைதமகெடாநிலை, யாப்பழியாமையென்றளபெடைவேண்டும்" என்றாராகலின். அறிஞருணாததளபுமென்று சிறப்பித்தவதனால் குற்றெழுத்தும் ஒற்றளபெடையும் ஓரோவொன்று ஒருமாத்திரை நெட்டெழுத்திரண்டு மாத்திரை இயிரளபெடை மூன்றுமாத்திரை ஆய்தமும் மெய்யும் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஓரோவொன்றரைமாத்திரை ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும ஓரோவொன் றொன்றரைமாத்திரை மகரக்குறுக்கமும ஆயதக்குறுக்கமு மோரோவொன்று காலமாத்திரை என்னை-ஒன்றிரண்டொரு மூன்றொன்றரையரைகா லென்றனர்பொழுதிகவ யிலைமநொடியளவே" கண்ணிமைகைந் நொடியளவேமாத்திரை நுண்ணிதினுணர்ந்தோர்கண்டவாறே" ஒற்றுக்குமாத்திரையொன்றேயளபெழுந்தற் றேற்றக்குறிலதுபோலாம உன்னலகாலே யூன்றலரையே முறுக்கன முககால விம்தநலொனறே" என்றார் பிறருமெனக்கொள்க.

குறிலேநெடிலேகுறிலிணையேனைக்குறினெடிலே
நெறியேவரினுநிறைந்தொற்றடுப்பினுநேர்நிரையென்
றறிவேய்புரையுமென்றோளியுதாரணமாழிவெள்வேல்
வெறியேசுறாநிறம்விண்டோய்விளாமென்றுவேண்டுவரே.

இ-கை- நிரனிறைப்பொருள்கோள் வகையானேரசை நிரையசையுமாமாறும் அவற்றிற்குதாரணமாமாறும் உணர்த்துற்று.

இ-ள். குறிலே நெடிலே குறிலிணையேனைக் குறினெடிலே நெறியே வரினு நிறைந்தொற்றடுப்பினு நேர்நிரையென்றறி. எ-து. குற்றெழுத்துத் தனியேவரினும் நெட்டெழுத்துத் தனியேவரினும் குற்றெழுத்தொற்றடுத்து வரினும் நெட்டெழுத்தொற்றடுத்துவரினும நேரசையாம் குறிலிணைந்துவரினும் குறினெடிலிணைந்துவரினும், குறிலிணைந்தொற்றடுத்துவரினும், குறினெடிலிணைந்தொற்றடுத்துவரினும், நிரையசையாம். என்னை" நெடில்குறிறனியாய்நின்று மொற்றடுத்து, நடைபெறுநேரசை நால்வகையானே "குறிலிணை குறினெடி றனித்து மொற்றடுத்து, நெறிமையினைங்காய் வருநிரையசையே" என்றாராகலின். வேய்புரையுமென்றோளி. எ-து மாதே-முன்னிலை. உதாரணமாழிவெள்வேல்வெறியே சுறாநிறம்விண்டோய் விளாமென்று வேண்டுவரே.

---

* பரவைவழக்கென்பது—உலகவழக்கு.

என்பது. நேரசைக்குதாரணம்-ஆ-ழி-வெள்-வேல்-எ-ம். நிரையசைக்குதாரணம். வெறி-சுறா-நிறம்-விளாம்-எனவுஞ்சொல்லுவர்புலவர்-எ-று. அகலம்-உரையிற்கொள்க. அகலமெனினும், விருத்தியுரையெனினு மொக்கும். என்னை" அகலமென்பதாசறக்கிளப்பின், விகலமின்றி விரித்துரைப்பதுவே. என்றாராகலின். விண்டோய் விளாமென்று சிறப்பித்தவதனால நேரசை ஓரலகுபெறும் நிரையசை ஈரலகுபெறுமெனக்கொள்க. வா-று-ஆ எனத்தனிநெடில நேரசையாயினவாறும், ழி-எனத்தனிக்குறில நேரசையாயினவாறும், வெள்-எனக்குற்றெழுத்தொற்றடுத்து நேரசையாயினவாறும, வேலென நெட்டெழுத்தொற்றடுத்து நேரசையாயினவாறும், வெறி-எனக்குறிலிணைந்து நிரையசையாயினவாறும், சுறா-எனக்குறினெடிலிணைந்து நிரையசையாயினவாறும், நிறம்-எனக்குறிலிணைக்கொற்றடுத்து நிரையசையாயினவாறும், விளாம்-எனக்குறினெடிலிணைக்கொற்றடுத்து நிரையசையாயினவாறுங்காண்க. இவற்றிற்குச்செய்யுள்வருமாறு. ஆ" போது சாந்தம் பொற்பவேந்தி, ஆதிநாதற்சேர்வோர், சோதிவானந்துன்னுவாரே" இதுநேரசைநான்கும்வந்தசெய்யுள். ஆ" அணிநிழலசோகமர்ந்தருணெறி நடாத்திய, மணிதிகழவிரொளிவரதனைப், பணிபவர் பவநெறி பரிசறுப்பவரோ, இது நிரையசைநான்கும வந்தசெய்யுள் குறிலேநெடிலே யெனனுமிசுதந்திரைதன்னையே யிலக்கியமாகவலகிடினுமிழுக்காது என்னை "குறிலேநெடிலே குறிலிணைகுறினெடில், ஒற்றொடுவருதலொடு மெய்ப்படாஅ, நேருநிரையுமென்று சிறப்பெயரோ" என்றார் தொல்காப்பியனார் "கோழிவோதன் நேரசைநிரையசை, யாழ்புனலவாழ்க்கை வெறிசுறு நிறவுகுரால்," என்று காரணமெடுத்தோதினாருமுளரெனக்கொள்க(௫)

ஈரசைநாற்சீரகவற்குரியவெண்பாவினவாம்
நேரசையாலிற்றமூவசைச்சீர்நிரையாலிறுப
வாரசைமென்முலைமாதேவகுத்தவஞ்சிக்குரிச்சீர்
ஓரசையேநின்றுஞ்சீராம்பொதுவொருநாலசையே.

இ-ள். அவ்வசைகளானாகிய சீர்களதுபெயர் வேறுபாடுணர்த்து-ற்று-ஈரசைநாற்சீரகவற்குரிய-எ-து-இரண்டசையினாகிய நான்குசீருமாசிரியவுரிச்சீரெனப்படும்-எ-று. அகவலெனினும், ஆசிரியமெனினுமொக்கும். என்னை" அகவலென்பதாசிரியப்பெயரே" என்றாராகலின். வெண்பாவினவாம்நேரசையாலிற்ற மூவசைச்சீர்-எ-து. நேரசையிறுதியாகிய மூவசைச்சீர்நான்கும் வெண்பாவுரிச்சீரெனப்படும்-எ-று. நிரையாலிறுப-வகுத்தவஞ்சிக்குரிச்சீ-எ-து. நிரையசையிறுதியாகிய மூவசைச்சீர்நான்கும் வஞ்சியுரிச்சீரெனப்படும்-எ-று. வாரசைமென்முலைமாதே-எ-து. மகடூஉமுன்னிலை. ஓரசையேநின்றுஞ்சீராம்-எ-து. ஓரோவிடத்து நேரசைதானே நின்றுஞ்சீராம். நிரையசைதானே நின்

றஞ்சீராம், அசையசைச்சீரெனப்படும்-எ-று. பொதுவொருநாலசை யே-எ-து நாலசையினுகியசீர் பொதுச்சீரெனப்படும்-எ-று. நால் கென்பதனை யெல்லாவற்றோடுங்கூட்டி மத்திமதீபமாகப்பொருளுரை த்துக்கொள்க. என்னை "ஈரசைகூடியசீரியச்சீரவை, யீரிரண்டென்ட ரியல்புணர்ந்தோரே, மூவகைச்சீருரிச் சீரிருநான்கினு' ணேரிறுநான் கும் வெள்ளையல்லனபாவினுள்வஞ்சியின்பாற்பட்டனவே" "நாலசை யானுநடைபெறு மோரசைச், சீர்நிலையெய்தலுஞ்சிலவிடத்துளவே" என்ருர்காக்கைபாடினியார். (சா)

தேமா புளிமா கருவிளங் [illegible]விளஞ் சீரகவற்
காமாங் கடைகா யடையின் வெண்பாவிற் கந்தங்கனியா
வாமாண் கலையல் குன்மாதே வருத்தவஞ்சிக்குரிச்சீர்
நாமாண் புரைத்தவசைச் சீர்க்குதாரண நாண்மலரே.

இ-கை. முறையானே முதனான்குசீருக்குமுதாரணமாமாறுணர்த்து ற்று-தேமா புளிமா கருவிளங் கூவிளஞ் சீரகவற்காம்-எ-து. நேர்நேர்-நிரைநேர்-நிரைநிரை-நேர்நிரையாகியதேமா-புளிமா-கருவிளம்-று-ஆங் கடைகாபடையின் வெண்பாவிறகென்பது - அவைகடையிற்காயென் னுஞ் சொற்பெற்று-தேமாங்காய்-புளிமாங்காய்-கருவிளங்காய்-கூவிள ங்காய் எனவரு நான்குசீரும் வெண்பாவுரிச் சீருக்குதாரணமாம்க் எ-று, அந்தங்கனியா-வருத்தவஞ்சிக்குரிச்சீர்-எ-து. அவ்வீற்றின்கட்க னிஎன்னுஞ் சொற்பெற்றுத்தேமாங்கனி-புளிமாங்கனி- கருவிளங்கனி கூவிளங்கனிஎனவரு நான்குசீரும்வஞ்சி யுரிச்சீருக் குதாரணமாம்- எ-று, வாமாண்கலையல்குன்மாதே-எ-து. மகடூஉமுன்னிலை. நாமாண்பு ரைத்தவசைச்சீர்க்குதாரணநாண்மலரோ - எ-து. ஓரோவிடத்தாமென் றுனாக்கப்பட்ட-ஓரசைச்சீருக்குதாரணம், நாள் என்பதூஉம் - மலர் என்பதூஉம்-ஆமென்றவாறு, நாள்-எ-து. நேரசைச்சீருக்கும், மலர்- எ-து. நிரையசைச்சீருக்கும உதாரணமாம், ஆமென்பதனை எல்லாவற் றோடுங்கூட்டி மத்திமதீபமாகப் பொருளுரைத்துக்கொள்க. வெண்டு றை"அம்பவள்வரிநெடுங், கறுப்வஞ்சிக், கொம்பவள்கொடிமருங் குல் கோங்கின், அரும்பவண் முலையொக்குமேயொக்கும், கரும்ப வள்வாயிற்சொல்" என்னும்பொய்கையார் வாக்கினுள்ஒக்குமென்பத னை எல்லாவற்றோடுங்கூட்டிப் பொருளுரைத்துக்கொண்டாற்போலக் கொள்க. (எ)

தண்ணிழறண்பூநறும்பூநறுநிழறந்துறழ்ந்தால்
எண்ணிருநாலசைச்சீர்வந்தருகுமினியவற்றுட்
கண்ணியபூவினங்காய்ச்சீரனையகனியொடொக்கும்
ஒண்ணிழற்சீரசைச்சீரியற்சீரொக்குமெரிண்டனைக்ட—

இ-கை. பொதுச்சீருக்குதாரணமாமாறும், அவற்றதெண்ணும் பொதுச்சீரும், அசைச்சீரும், செய்யுளகத்து வருஞ்சார்றறளை வழங்குமுறைமையு முணர்த்து-ற்று. தண்ணிழல்-அறுதும்-எ-து. தேமா-புளிமா-கருவிளம்-கூவிளம்-என்னும்நான்சீனோடும். தண்ணிழல் - தண்பூ-நறும்பூ நறுநிழலென்னுநான்கினையும், முறையானேகொணர்ந்துதாழ்த்தாற் பதினாறுநாலசைச்சீருக்குதாரணமாம். எ-று. தேமா - புளிமா-கருவிளம்-கூவிளம் என்பன அதிகாரத்தால் வருவித்துரைக்கப்பட்டன. அறுதும் என்பதனால் அச்சீர்செய்யு ளகத்தருகியன்றி வாராவெனக்கொள்க. வ-று. தேமாந்தண்ணிழல்-புளிமாந்தண்ணிழல்-கருவிளந்தண்ணிழல-கூவிளந்தண்ணிழல. எ-ம் தேமாந்தண்பூ-புளிமாந்தண்பூ - கருவிளந்தண்பூ-கூவிளந்தண்பூ. எ-ம். தேமாநறும்பூ-புளிமாநறும்பூ-கருவிளநறும்பூ-கூவிளநறும்பூ. எ-ம். தேமாநறுநிழல-புளிமாநறுநிழல் கருவிளநறுநிழல்-கூவிளநறுநிழல் எனவுங்கொள்க. இவற்றுள்-காய்ச்சீர்களைய-எ-து. அங்காலசைச்சீர் பதினாறனுள்ளும், பூவென்னுஞ்சொல்லிறுதியாகிய நேரீற்றுப் பொதுச்சீரொட்டும், காயென்னுஞ் சொல்லிறுதியாகிய வெண்பா வுரிச்சீரேபோலக் கொண்டுவருஞ்சீர் முதலசையோடொன்றுவது வெண்சீர் வெண்டளையாகவும், ஒன்றாதது கலித்தளையாகவும், வழங்கப்படும் - எ-று. கனியொடொக்கு மொண்ணிழற்சீர். எ-து. நிழலென்னுஞ்சொல்லிறுதியாகிய நிரையீற்றுப்பொதுச்சீரொட்டும் கனியென்னுஞ்சொல்லிறுதியாகிய வஞ்சியுரிச்சீரேபோலக் கொண்டுவருஞ்சீர் முதலசையொடொன்றினும் ஒன்றாவிடினும், வஞ்சித்தளையென்றுவழங்கப்படும்-எ-று. அசைச்சீரியற்சீரொக்கும்-எ-து. ஓரசைச்சீர் ஆசிரியவுரிச்சீரேபோலக் கொண்டுவருஞ்சீர் முதலசையோடொன்றுவது ஆசிரியத்தளையாகவும், ஒன்றாதது இயற்சீர்வெண்டளையாகவும் வழங்கப்படும்-எ-று இயற்சீரொனினும், ஆசிரியவுரிச்சீரொனினுமொக்கும். என்னை "இயற்சீரெல்லாமாசிரியவுரிச்சீர்" என்றாராகலின். ஒண்டளைக்கே-எ-து. ஒள்ளியதளைவழங்குமிடத்து-எ-று. ஒண்டளையென்பதனை இறுதிவிளக்காகப் பொருளுரைத்துக்கொள்க. கண்ணியபூவினமென்று சிறப்பித்தவதனால் வெண்பாவினுள் நாலசைச்சீர்வாரா. ஆசிரியத்துள்ளுங் குற்றுகரம் வந்துழியன்றிவாரா. கலியினுள்ளும் பெரும்பான்மையுங்குற்றுகரம் வந்துழியன்றிவாரா. வஞ்சி, யுட்குற்றுகரம்வாராதேயும்வரப்பெறும், வஞ்சியுளிரண்டிநாலசைச்சீரோ, ரடியுள்ளருகிக்கண்ணுற்றுநிற்கவும் பெறும் - அல்லனவற்றுள் பெரும்பான்மையு மோரடியுளொன்றன்றிவாரா, இரண்டுவரினுங் கண்ணுற்றுநில்லா. பாவினத்துள்ளும்பாவின்றுவாராவெனக்கொள்க ஒண்ணிழற்சீரென்று சிறப்பித்தவதனால் நிழலென்னுஞ்சொல்லிறுதியாகிய நிரையீற்றுப்பொதுச்சீரொட்டும், வஞ்சியுளல்லதுவாராவெனக்கொள்க, என்னை "நாலசையானடைபெற்றன வஞ்சியுளொன்றன்று மேனுழியோ

ன்றுசென்றாகலுமந்தநிரையசைவந்தன, கூறியவஞ்சிக்குரியனவாதலு, மாகுமென்பவறிந்திசினோரே "என்றார் காக்கைபாடினியார். இனி ஒருசாரார் வெண்பாவினுளளெழுந்தால் நாலசைச்சீர் வருமென்பாருளராயினும் அவ்வாறலகிட்டுதாரணவாய் பாட்டாலோசை யூட்டும்பொழுது செப்பலோசைபிழைக்குமென்பதூஉம், ஆண்டுச்சீருந்தளையுஞ்சிதையவாராமையா னளபெடுப்பனவுமல்ல. அளபெடுப்பினுமளபெடைகள் அலகுகாரியம் பெறுவனவுமல்லவென்பதூஉம், காக்கைபாடினியார்முதலாகிய தொல்லாசிரியர் துணிவு, அதுவே இந்நூலுடையாருக்கு முடன்பாடு. (அ)

குன்றக்குறவனகவல்பொன்னாரம்வெண்பாட்டுவஞ்சிக்
கொன்றுமுதாரணம்பூந்தாமரையென்பவோரசைச்சீர்
நன்றறிவாரிற்கயவரும்பாலொடுநாலசைச்சீர்க்
கன்றதென்றாரள்ளற்பள்ளத்தினோடங்கண்வானத்துமே.

இ-கை. முறையானே ஐந்துவகைப்பட்ட சீரானும், வந்தவிலக்கியங்கட்கு முதனினைப்புணர்த்து-ற்று. குன்றக்குறவனகவல்-எ-து. ஆ,, குன்றக்குறவன் காதன்மடமகள், வரையரமகளிர் புரையுஞ்சாயல, ளையரும்பியமுலையள், செய்யவாயினள் மார்பினள்சுணங்கே " இச்செய்யுளில் ஆசிரியவுரிச் சீர்நான்கும் வந்தவாறுகண்டுகொள்க. பொன்னாரம் வெண்பாட்டென்பது "பொன்னாரமார்பிற் புனைகழற்காற்கிள்ளிபேர், உன்னேனென்றூழலக்கை பற்றியேற்—கென்னே, மனனொடுவாயெல்லாமல்குநீர்க்கோழிப், புனனாடன்பேரேவரும் "இச்செய்யுளில் வெண்பாவுரிச்சீர்நான்கும் வந்தவாறுகண்டுகொள்க, வஞ்சிக்கொன்றுமுதாரணம். பூந்தாமரையென்ப-எ-து. "பூந்தாமரைப்போதலமரத், தேம்புனலிடைமீன்றிரிதரும், வளவயலிடைக்களவயின்மகிழ், வினைக்கம்பலைமனைச்சிலம்பவும், மனைச்சிலம்பிய மணமுரசொலி, வயற்கம்பலைக் கயலார்ப்பவும், நாளும், மகிழுமகிழ்தூங்கூரன், புகழ்தலானாப்பெருவண்மையனே "இச்செய்யுளில்வஞ்சியுரிச்சீர்நான்கும் வந்தவாறுகண்டுகொள்க. ஓரசைச்சீர் நன்றறிவாரிற்கயவரும் பாலொடுதேனென்பது. வெ "நன்றறிவாரிற்கயவர் திருவுடையர், நெஞ்சத்தவலமிலர்,, "பாலொடுதேன் கலந்தற்றேபணிமொழி, வாலெயிறூறியநீர்,, என்னுமிச்செய்யுட்களில் இலர்-எ-ம். நீர்-எ-ம். அசைச்சீர்களாயினவாறு கண்டுகொள்க. நாலசைச்சீர்க்கன்றதென்றாரள்ளற் பள்ளத்தினோடங்கண் வானத்தும்-எ-து, "அள்ளற்பள்ளத்தகன்சோணாட்டு, வேங்கைவாயில வியன்குன்றூரன்,, என்னும் பழம்பாட்டினுள் ஓரடியுளிரண்டு நாலசைச்சீர்வந்தவாறு கண்டுகொள்க "அங்கண்வானத்தமரரசரும், வெங்களியானை வேல்வேந்தரும், வடிவார்கூந்தன் மங்கையரும், கடியலோங்கிக் * தாழ்ந்திறைஞ்சச், சிங்கஞ்சுமந்த மணியணையிசைக், கொங்கவிரசோ

தன்வருஞ்சீர் முதலசையோடொன்றுவது கலித்தளையாம்-எ-று, வல்
லோர்வகுத்தவென்று சிறப்பித்தவதனால், வெண்பாவுரிச்சீர்நின்று பிறி
தாகிவருஞ்சீர் முதலசையோடொன்றுவதூஉம், கலித்தளையே சிறப்பி
ன்றாயினு மெனக்கொள்க, வெண்டளையாமொண்சீரகவலுரிச்சீர் விக
ற்பமும் - எ - து, ஆசிரியவுரிச்சீர் நின்று தன்வருஞ்சீர் முதலசையோ
டொன்றுவது இயற்சீர்வெண்டளையாம்-எ-று, ஒண்சீரொன்று சிறப்பித்
தவதனால் ஆசிரியவுரிச்சீர்நின்று பிறிதாகிவருஞ் சீர் முதலசையோடொ
ன்றுவதூஉம், இயற்சீர்வெண்டளையேசிறப்பின்றாயினுமெனக்கொள்க,
ஒண்ணுதலென்பது மகடூஉமுன்னிலை, என்னை "இயற்சீரிரண்டு தலைப்
பெயம்முன், விகற்பமிலவாய் — வடைப்பி, னாற்பெயராசிரியத்தளை
யாகும், வெண்சீரொன்றலுமியற்சீர் விகற்பமு, மென்றிரண்டென்ப வெ
ண்டளைக்கியல்பே "இயற்சீரிரண்டுதலைப்பெயரம்முன், விகற்பவகைய
துவெண்டளையாகும் "உரிச்சீரதனுநேரொத்தமையன்றிக், கலக்குந்தளை
யெனக்கண்டிசினோரே," "வெண்சீர்நிறுத்திநிரையசைபின்வரக், கண்ட
னவெல்லாக்கலித்தளையாகும்," "தன்சீரிரண்டு தலைப்பெயறம்முளொத்
தொன்றினுமொன்று தொழியினும் வஞ்சியின், பந்தமெனப்பெயர் பக
ரப்படுமே," என்றார் காக்கைபாடினியார். (௫)

திருமழையுள்ளாரகவல்சிலைவிலங்காகும்வெள்ளை
மருளறுவஞ்சிமந்தாநிலம்வந்துமைதீர்கலியின்
தெரிவுறுபந்தநல்லாய்செல்வப்போர்க்கதக்கண்ணனென்ப
துரிமையின்கண்ணின்மையோரசைசீருக்குதாரணமே.

இ-கை. அத்தளைகளான்வந்தஇலக்கியங்கட்குமுதனினைப்புணர்த்து-
ற்று திருமழையுள்ளாரகவல்.எ-து.'அதிருமழை தலைஇ பவிருணிறமிசும்
பின்,விண்ணதிரிமிழிசைகடுப்பப்,பண்ணமைந்தவாதேர்சென்றவாறே'
இது நிரையொன்றாசிரியத்தளையான் வந்தசெய்யுளா 'உள்ளார்கொல்
லோதோழிமுள்ளுடை அலங்குகுலையீந்தின்சிலம்பிபொதிசெங்காய்து
கில்பொதிபவளமேய்க்கும்,அகில்படுகள்ளியங்காடிறந்தோரே"இதுநே
ரொன்றாசிரியத்தளையான்வந்தசெய்யுள்சிலைவிலங்காகும்வெள்ளைஎ-து
வெசிலைவிலங்குநீள்புருவஞ்சென்றொசியநோக்கி,முலைவிலங்கிற்றென்
றுமுனிவாள்மலைவிலங்கு, தார்மாலைமார்பநனிமைபொறுக்குமோ,கா
ர்மாலைகண்கூடும்போதுஇதுவெண்சீர்வெண்டளையானும்,இயற்சீர்வெ
ண்டளையானும் வந்தசெய்யுள். மருளறுவஞ்சிமந்தாநிலம்வந்து-எ-து,
மந்தாநிலம்வந்தசைப்ப, வெண்சாமரைபுடைபெயர்தரச்,செந்தாமரை
நாண்மலர்மிசை, எனவாங்கினிதிறைதுங்கியவிறைவனை, மனமொழி
மெய்களின்வணங்குநமகிழ்ந்தே. "இது மயக்கறவகுத்தவஞ்சித்தளை
ஒன்றுவதூஉம், ஒன்றியதூஉமாக வந்தசெய்யுள். "மைதீர்கலியின்தெ
ரிவுறுபந்தம் - செல்வப்போர்க்கதக்கண்ணன்-எ-து. க-பா "செல்வப்

போர்க்கதக்கண்ணன் செயிர்த்தெறிந்தசினவாழி, முல்லைத்தார்மறமன்னர் முடித்தலையையுருக்கிப்போய், எல்லைநீர் வியன்கொண்மூவிடை நுழையுமதியம்போல், மல்லலோங்கெழில்யானை மருமம்பாய்ந்தொளித்ததே" இது மயக்கமிலலாக்கலிந்தளையான்வந்தசெய்யுள், கல்லாய்-எ-து, மகடூஉமுன்னிலை, உரிமையின்கண்ணின்மையோ ரசைச்சீருக்குகாரணம். எ-து, வ வி, "உரிமையின்கண்ணின்மையால், அரிமதர் மழைக்கண்ணாள், செருமதி செய்தீமையால், பெருமைகொன்றவென்பவே." இம்மூச்சீரடிவஞ்சி விருத்தந்துண்மழையென் னுநிரையசைச்சீரியற் சீரோபோலநின்று வருஞ்[redacted]லசையோ டொன்றுமையினியற்சீர் வெண்டளையாயிற்று. செ[redacted]னும் நேரசைச்சீரியற் சீரேபோலநின்று வருஞ்சீர்முதலசையோ டொன்றின்மையினாசிரியத்தளையாயிற்று. (௰௪)

குறளிருசீரடிசிந்து மூச்சீரடிநாலொருசீர்
அறைதருகாலையளவொடுநேரடியையொருசீர்
நிறைதருபாதநெடிலடியாநெடுமென்பணைத்தோட்
கறைகெழுவேற்கணால்லாய்மிக்கபாதங்கழிநெடிலே.

இ-கை. அத்தளைகளான் வந்தவடிகளது பெயர் வேறுபாடுணர்த்து-ற்று, குறளிருசீரடி, எ-து, இருசீரான்வந்தவடி குறளடியெனப்படும், சிந்து மூச்சீரடி, எ-து, மூச்சீரான் வந்தவடி சிந்தடியெனப்படுமா நாலொரு சீரறை தருகாலை யளவொடு நேரடி-எ-து, நாற்சீரான்வந்தவடியளவடியென்றும், நேரடியென்றுஞ்சொல்லப்படும், ஐயொருசீர் நிறைதருபாத நெடிலடியாம்-எ-து, ஐஞ்சீரான்வந்தவடி நெடிலடியெனப்படும்-எ-று, நெடுமென்பணைத்தோட்கறைகெழுவேற்கணால்லாய்-எ து, மகடூஉமுன்னிலை, மிக்கபாதங்கழிநெடில்-எ-து, ஐஞ்சீரின்மிக்கசீரான் வருமடியெல்லாங் கழிநெடிலடி யெனப்படும்- எ-று, அகலமுரையிற்கொள்க, என்னை "குறளடிசிந்தடியிருசீர்மூச்சீ, ரளவடிநெடிலடிநாற்சீரைஞ்சீர், கிரனிறைவகையானிறுத்தனர்கொளலே. "கழிநெடிலடியே கசடற கிளப்பி, னறுசீர்முதலாவையிரண்டுறு, வருவனபிறவும் வகுத்தனர்கொளலே"என்பனயாப்பருங்கலம். (௰௫)

திரைத்தவிருதுகுறள்சிந்தளவடிநேம்பழுத்து
விரிக்குநெடிலடிவேனெடுங்கண்ணிவென்றுன்வினையின்
இரைக்குங்கணிகொண்டமூவடிவோடிடங்கொங்குமற்றும்
கரிக்கைக்கவான்மருப்பேர்முலைமாதர்களிநெடிலே.

இ-கை. அவ்வடிகளான்வந்தவிலக்கியங்கட்கூழ்தனினைப்புணர்த்து-ற்று-திரைத்தவிருதுகுறள்சிந்து-எ-து, வ-து-"திரைத்தசாலிகை-திரை

சீர்க்கழி நெடிலடியான்வந்தசெய்யுள், மற்றுமென்பதனுல்பதின்சீரின மிக்கு வருவனவுமுள. அவையாப்பருங் கலவிருத்தி யுட்கண்டுகொள்க, வேனெடுங்கண்ணி என்பதும், கரிக்கைக்கவான் மருப்பேர்மூலமாதரென்பதும், மகடூஉமுன்னிலை, கழிநெடிலே, எ-து, இவையெல்லாங் கழிநெடிலடியாம்—எ-று. விரிகத நெடிலடியென்று சிறப்பித்தவதனுல, எண்சீரின்மிக்க சீரான் வருமடிகள் பிறப்பிலவெனக்கொள்க, என்னை "இரண்டுமுதலாவெட்டீறாகத், திரண்டசீரானடிமுடிவுடைய, விறந்துவரினுமடிமுடிவுடைய, சிறந்தவல்ல செய்யுளுள்ளே,, என்றார் காக்கைபாடினியார். (௰ங)

வெள்ளைக்கிரண்டடி வஞ்சிக்குமூன்றடிமூன்றகவற்
கெள்ளப்படாக்கலிக்கிரண்டாகுமிழிபுரைப்போர்
உள்ளக்கருத்தினளவேபெருமையொண்போதலேந்த
கள்ளக்கருநெடுங்கட்சுரிமென்குழற்காரிகையே.

இ-சை. அவ்வடிவனை யறையானவந்த நான்குபாவிற்குஞ் சிறுமை பெருமையுணர்த்து-ற்று, வெள்ளைக்கிரண்டடி, எ-து, வெண்பாவிற் கிரண்டியேசிறுமை, எ-று, வஞ்சிக்குமூன்றடி, எ-து. வஞ்சிப்பாவிற்கு மூன்றடியேசிறுமை. எ-று, மூன்றகவற்று, எ-து, ஆசிரியப்பாவிற்கு மூன்றடியேசிறுமை. எ-று, எள்ளப்பட ாக்கலிக்கிரண்டாகும்-எ-று. கலிப்பாவிற்குநான்கடியேசிறுமை, எ-து, இழிபு-எ-று, நான்குபாவிற்குஞ் சிறுமை-எ-று, உரைப்போருள்ளக்கருத்தினளவேபெருமை-எ-து. நான்குபாவிற்கும் பெருமைக்கெல்லை பாடுவோனது பொருண்முடிவுக்குறிப்பே வரையறையிலலே-எ-று, ஒண்போதலேந்த காரிகையே-எ-து, மகடூஉமுன்னிலை. எள்ளப்படாக்கலிக்கென்று சிறப்பித்தவதனுல், துள்ளலோசையிற்சிறிதுவழுவாது நாற்சீர்நாலடியான்வருவது தரவுகொச்சகக்கலிப்பாவென்றும், துள்ளலோசையிற் சிறிதுவழுவி நாற்சீர் நாலடியான்வருவது கலிவிருத்தமென்றும், தெரிந்துணரப்படுமெனக்கொள்க. வெள்ளைக்கிரண்டா மகவற்குமூன்று கலிக்கடிநான்கெள்ளப்படா வஞ்சிப்பாவிற்கு மூன்றுமிழிபென்று பாக்களைமுறையிற் கூறுதலை தடுமாற்றமாகக் காரிகைசொல்லவேண்டியதென்னையோவெனின், தலை தடுமாற்றந்தந்து புணர்ந்துரைத்தலெனுந் தந்திரவுத்தியாகலின், அன்றியும், மயேச்சுரர் முதலாகியவொரு சாராசிரியர்வஞ்சிப்பாவிரண்டடியானும் வரப்பெறுமென்றுரென்பதூஉம், ஆசிரியப்பா விரண்டடிச்சுரிதகமாய் வரப்பெறுமென்றுரென்பதூஉம், அறிவித்தற் கெனக்கொள்க. என்னை "வெண்பாவாசிரியங்கலியேவஞ்சியென, நுண்பாவுணர்ந்தோர் நுவலுங்காலை, யிரண்டுமூன்று நான்குமிரண்டும், திரண்டவடி

யின் ப..................., என்றெடுத்தோதிய மயேச்சுரர் வஞ்சிச்சிறு மைக் குக்காட்டும்பாட்டு "பூந்தண்சினைமலர் மல்கியபொழிற்பிண்டி, வேந்தன்புகழ்பர வாதவர்வினைவெலலார், அதனல், "அறிவனதடியி ணைபரவிப், பெறுகுவர்யாவரும் பிறவியினெறிமே" இதனை முச்சீரடி வஞ்சியாக வலகிட்டு இரண்டடியாமாறுகண்டுகொள்க. என்னை "ஒரு தொடையீரடி வெண்பாச்சிறுமை, யிருதொடைமூன்று மடியினிழி ந்து, வருவனவாசிரிய மில்லனமொழிப, வஞ்சியுமப்பா வழக்கினவா கும்,, "நான்காமடியினு மூன்றுந்தொடையினுந் தாழ்ந்துகலிப்பா தழு வுதலில்லே., "உலாப்போர் [redacted] னே கேகிப்பெருமை, வணத்தித்து லேயென வைத நுணையில்லெண் றுரைத்தனர்மாதோ வுணர்ந்திசினு ோ,, என்றூர் காக்கைபாடினியார் (௰௪)

அறத்தாறிதுவெனவெள்ளைக்கிழிபகவற்கிழிபு
குறித்தாங்குரைப்பின்மூதுக்குறைந்தாங்குறையாக்கலியின்
திறத்தாறிதுசெல்வப்போர்ச்செங்கண்மேதிவஞ்சிச்சிறுமை
புறத்தாழ்கருமென்குழற்றிருவேயன்னபூங்கொடியே.

இ-கை. அவ்வடிவரையறையான்வந்த இலக்கியங்கட்கு முதனினைப புணர்த்து-ற்று-அறத்தாறிதுவென வெள்ளைக்கிழிபு-எ-து. வெ "அறத் தாறிதுவென வேண்டாசிவிகை, பொறுத்தானேடூர்ந்தா னிடை,, இஃ திரண்டடியான் வெண்பாவிற்குச் சிறுமை வந்தவாறு. அகவற்கிழிபு குறித்தாங்குரைப்பின மூதுக்குறைந்தாம்-எ-து, ஆ "மூதுக்குறைந்த னளே, மலையறென்வேற்கணணி, புலையும்வாரா மூதுக்குறைந்தன ளே● இஃ து மூன்றடியான் ஆசிரியப்பாவிற்குச் சிறுமைவந்தவாறு குறையாக்கலியின்றிறத்தாறிது செலவப்போர்-எ-து, க-பா. "செல்வப் போர்க்கதக்கண்ணன் - மருமம்பாய்ந்தொளித்ததே,, இஃது நான்கடி யாற் கலிப்பாவிற்குச் சிறுமைவந்தவாறு, செங்கண்மேதிவஞ்சிச்சிறு மை-எ-து, வ "செங்கண்மேதிகரும்புழக்கி அங்கணீலத்தலருந்திப், பொழிற்காஞ்சிநிழற்றுயிலும், செழுநீர்நல்வயற் கழனிரன், புகழ்த லாருப்பெரு வண்மையனே,, இஃதுமூன்றடியான் வஞ்சிப்பாவிற்குச் சிறுமைவந்தவாறு, புறத்தாழ்கருமென்குழற்றிரு வேயன்னபூங்கொடி யே-எ-து, மகடூஉமுன்னிலை-ஆங்கு-அசை. (௰௫)

எழுவாயெழுத்தொன்றின்மோனையிறுதியியைபிரண்டாம்
வழுவாவெழுத்தொன்றின்மாதேயெதுகைமறுதலைத்த
மொழியான்வரினுமுரணடிதோறுமுதன்மொழிக்கண்
அழியாதளபெடுத்தொன்றுவதாகுமளபெடையே.

இ-கை. அடிமோனை, இணைமோனை, பொழிப்புமோனை, ஒரூஉமோனை, கூழைமோனை, மேற்கதுவாய்மோனை, கீழ்க்கதுவாய்மோனை, முற்றுமோனை-எ-ம். அடியியைபு, இணையியைபு, பொழிப்பியைபு, ஒரூஉவியைபு, கூழையியைபு, மேற்கதுவாயியைபு, கீழ்க்கதுவாயியைபு, முற்றியைபு-எ-ம். அடியெதுகை, இணையெதுகை, பொழிப்பெதுகை, ஒரூஉவெதுகை, கூழையெதுகை, மேற்கதுவாயெதுகை, கீழ்க்கதுவாயெதுகை, முற்றெதுகை-எ-ம். அடிமுரண், இணைமுரண், பொழிப்புமுரண், ஒரூஉமுரண், கூழைமுரண், மேற்கதுவாய்முரண், கீழ்க்கதுவாய்முரண், முற்றுமுரண்-எ-ம். அடியளபெடை, இணையளபெடை, பொழிப்பளபெடை, ஒரூஉவளபெடை, கூழையளபெடை, மேற்கதுவாயளபெடை, கீழ்க்கதுவாயளபெடை, முற்றளபெடை - எ - ம். அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை-எ-ம், கிடந்ததொடையும், தொடைவிகற்பருமா மாறுணர்ந்துவா னெடுத்துக்கொண்டார். அவற்றுள்- இக்காரிகை அடிமோனையும், அடியியைபும், அடியெதுகையும், அடிமுரணும், அடியளபெடையுமா மாறுணர்த்து - ற்று-எழுவாயெழுத்தொன்றின் மோனை-எ-து, அடிதோறுமுதலெழுத்தொன்றிவரத்தொடுப்பது அடிமோனைத் தொடையெனப்படும்-எ-று, எழுவாயெனினும், ஆதியெனினும், முதலெனினு மொக்கும், மோனையெனினும், முதற்றொடையெனினுமொக்கும், இறுதியியைபு-எ-து, அடிதோறுமிறுதிக்கண்ணின்றவெழுத்தானும், சொல்லானும், ஒன்றிவரத்தொடுப்பது அடியியைபுத்தொடையெனப்படும்-எ-று. இரண்டாம்வழுவாவெழுத்தொன்றினெதுகை - எ - து, அடிதோறுமுகற்கண் இரண்டாமெழுத்தொன்றிவரத்தொடுப்பது அடியெதுகைத் தொடையெனப்படும், எ-று, மாதே-எ-து, மகடூஉமுன்னிலை, இரண்டாமெழுத்தொன்றினெதுகையென்னாது வழுவாவெழுத்தென்று மிகுத்துச்சொல்லியவதனால் இரண்டாமெழுத்தொன்றிவரினு முதலெழுத்தெல்லாந்தம்முளொத்தவளவினவாய்வந்து கட்டென்பதற்குப்பட்டென்பதல்லது பாட்டென்பதெதுகையாகாது-காட்டென்பதற்குப் பாட்டென்பதல்லது பட்டென்பதெதுகையாகாதெனக்கொள்க -மறுதலைத்தமொழியான்வரினு முரண்-எ-து, அடிதோறுமுதற்கட்சொல்லானும், பொருளானுமறுதலைப்படத்தொடுப்பது அடிமுரண் டொடையெனப்படும்-எ-று, மொழியான் வரினுமென்றவும்மையாற் பொருளான்வரினு மென்பதாயிற்று, அடிதோறும்-எ-து, மத்திமதீபமெனக்கொள்க, முதன்மொழிக் கண்ணழியாதளபெடுத் தொன்றுவதாகு மளபெடையே-எ-து, அடிதோறுமுதற்கணுயிரானும், ஒற்றானுமளபெடுத்தொன்றிவரத் தொடுப்பது அடியளபெடைத் தொடையெனப்படும்-எ-று, அழியாதென்றுமிகுத்

த்துச் சொல்லியவதனால் நான்குயிரளபெடையும், இரண்டொற்றளபெ
டையும், தம்முளொன்றிவரத் தொடுப்பது சிறப்புடைத்து, தொடை
விகற்பத்துள், நான்குயிரளபெடையும், இரண்டொற்றளபெடையுந்
தம்முண்மறு தலைப்படத்தொடுப்பினுமிழுக்காது, என்னை "முதலெழு
த்தொன்றின்மோனையெதுகை, முதலெழுத்தளவோ டொத்ததுமுத
லா, வஃதொழித்தொன்றினெதுகையென்ப," என்றார்பல்காயனார், "இறுவ
யொப்பினஃ தியைபெனமொழிப," என்றார் கையனார், "மொழியினு
பொருளினுமுரணுதன்முரணே," என்றார்தொல்காப்பியனார், "அளபெ
டைத்தொடைக்கே யளபெ[illegible]ான்றும்," என்றார்நத்தத்தனார். (௰௬)

அந்தமுதலாத்தொடுப்பதந்தாதியடிமுழுதும்
வந்தமொழியேவருவதிரட்டைவரன்முறையான்
முந்தியமோனைமுதலாமுழுதுமொவ்வாதுவிட்டால்
செந்தொடைநாமம்பெறுநறுமென்குழற்றேமொழியே.

இ-கை. அந்தாதித்தொடையும், இரட்டைத்தொடையும், செந்தொ
டையுமாமாறுணர்த்து-ற்று-அந்தமுதலாத்தொடுப்பதந்தாதி-எ-து, அ
டிதோறுமிறுதிக்கண்ணின்றவெழுத்தானும், அசையானும், சீரானும், அ
டியானுமற்றை யடிக்காதியாகத்தொடுப்பது அந்தாதித்தொடையென
ப்படும்-எ-று, அடிமுழுதும் வந்தமொழியே வருவதிரட்டை வரன்மு
றையான்-எ-து, ஓரடிமுழுதும, ஒருசொல்லேவரத்தொடுப்பது இரட்
டைத்தொடையெனப்படும-எ-று, வரன்முறையானென்று மிகுத்துச்
சொல்லியவதனால், ஈறறெழுத்தொன்றுகுறையினுமிழுக்காது-நாற்சீரி
ன்மிக்குவரப்பெறுதெனக்கொள்க, முந்தியமோனைமுதலாமுழுதுமொ
வ்வாதுவிட்டாற்செந்தொடைநாமம்பெறும்-எ-து, மேற்சொல்லப்பட்
டமோனைமுதலாயதொடையும், தொடைவிகற்பமும்போலாது, வே
றுபடத்தொடுப்பது செந்தொடையெனப்படும எ-று, முந்தியமோனை
யென்றுசிறப்பித்தவதனால்அசையும்சீருந்தம்முண்மறுதலைப்படத்தொ
டுப்பதுசிறப்புடைத்தெனக்கொள்க,நறுமென்குழற்றேமொழியே-எ-து
மகடூஉமுன்னிலை. என்னை. "அடியுஞ்சீருமசையுமெழுத்து, முடிவுமுத
லாச்செய்யுண்மொழியினஃ, தந்தாதித்தொடையென்றறைதல் வேண்
டும் என்றார் நத்தத்தனார்," "ஒருசொல்லடிமுழுதும் வருவதிரட்டை"
என்றார்மயேச்சுரார். "சொல்லியதொடையொடுவேறுபட்டியலிற், செ
ல்லியற்புலவரது செந்தொடை யென்ப," என்றார் தொல்காப்பியனா
"அசையினுஞ்சீரினு மிசையினுமெல்லா, மிசையாதாவதுசெந்தொ
டைதானே," என்றார்காக்கைபாடினியார். (௰௭

மாவும்புண்மோனையியைபின்னகைவடியேயெதுகைக்
கேழின்முரணுமிருள்பரந்தீண்டளபாஅவ்வளிய
ஓவிலந்தாதியுலகுடனுமொக்குமேயிரட்டை
பாவருஞ்செந்தொடைபூத்தவென்றுகும்பணிமொழியே.

இ-கை. அடிமோனைமுதலாகிய தொடைகளான்வந்த விலக்கியங்கட்குமுதனினைப்புணர்த்து - ற்று - மாவுமபுண்மோனை-எ-து ஆ "மாவும்புள்ளும் வதிவயிற்படர, மாநீர்விரிந்த பூவுங்கூம்ப, மாலைதொடுத்த கோதையுங்கமழ, மாலைவந்தவாடை, மாயோளின்னுயிர்ப் புறத்திறுத்தற்றே." "இஃதடிதோறு முதலெழு[illegible]ன்றிவரத்தொடுத்தமையான் அடிமோனைத்தொடை. -எ-று இயைபின்னகை.எ-து, ஆ "இன்னகைத் துவர்வாய்க்கிளவியுமணங்கே, நன்மாமேனிச்சுணங்குமணங்கே, ஆடமைத்தோளி யூடலுமணங்கே, அரிமதர்மழைக்கண்ணுமணங்கே, திருநுதற்பொறித்த திலதமுமணங்கே," இஃதடிதோறுமிறுதிச்சீரொன்றிவரத்தொடுத்தமையான் அடியியைபுத்தொடை-எ-று. வடியேயெதுகைக்கு -எ-து-இ-செ, "வடியேர்கண்ணீர்மல்கவான்பொருட்கட்சென்றார், கடியார்கனங்குழாய்காணார்சொல்கட்டின், இடியின்முழக்கஞ்சி யீர்ங்கவுள்வேழம், பிடியின்புறத்திசைத்தகை." "இஃதடிதோறுமிரண்டாமெழுத்தொன்றிவரத்தொடுத்தமையான் அடியெதுகைத்தொடை-எ-று. கேழின்முரணுமிருள்பரந்து-எ-து-ஆ, "இருள்பரந்தன்னமாநீர்மருங்கில், நிலவுகுவித்தன்னவெண்மணலொருசிறை, இருள்பிணித்தன்னகருங்கோட்டுப்புன்னை, பொன்வீயன்ன நுண்டாதிறைக்கும், சிறுகுடிப்பரதவர்மடமகள், பெருமதர்மழைக்கண்ணு முடையவா லணங்கே," இஃதடிதோறு முதற்கண்ணே மறுதலைப்பட்டத்தொடுத்தமையான் அடிமுரண்டொடை -எ-று. ஈண்டளபாஅவளிய-எ-து. இ-செ 'ஆஅவளியவலவன்றன்பார்ப்பிணோ, டிரைமேயுங்கொண்மணற்பள்ளியுட், டூஉந்திலாப்பலேப்பத்துஞ்சாநிறைவன்றோள், மேவலைப்பட்டநம்போனறுநுதால, ஓஓவுழக்குந்துயர் "இஃதடிதோறுமுதற்கண்ணேயளபெடுத்தொன்றிவரத்தொடுத்தமையான் அடியளபெடைத்தொடை. எ-று. ஓவிலந்தாதியுலகுடனும்-எ-து-ஆ "உலகுடன்விளக்குமொளிதிகழவிர்மதி, மதிநலழிக்கும்வளங்கெழுமுக்குடை, முக்குடைநீழற்பொற்புடையாசனம், ஆசனத்திருந்ததிருந்தொளியறிவன், ஆசனத்திருந்ததிருந்தொளியறிவனை, அறிவுசேருள்ளமோடருந்தவம்புரிந்து, துன்னியமாந்தரதென்ப, பன்னருஞ்சிறப்பின்விண்மிசையுலகே" "இஃதுநான்கந்தாதித்தொடையும் வந்தசெய்யுள். ஒக்குமேயிரட்டை-எ-து-இ-செ. "ஒக்குமேயொக்குமேயொக்குமேயொக்கும், விளக்கினிற்சீறெரியொக்குமேயொக்கும், குளக்கொட்டிப்பூவினிறம்" இஃதோரடிமுழுதுமொருசொல்லேவரத் தொடுத்த

மையால் இரட்டைத்தொடை-எ-று-பாவருஞ்செந்தொடை பூத்தவென்றாகும்-எ-து-ஆ "பூத்தவேங்கைவியன்சினையேறி, மயிலினமகவு நாடன். நன்னுதற்கொடிச்சி மனத்தகத்தோனே "இதுமோனை முதலாகிய தொடையும், தொடைவிகற்பமும் போலாதுவேறுபடத்தொடுத்தமையாற் செந்தொடை-எ-று. பணிமொழியே-எ-து. மகடூஉமுன்னிலை.()

இருசீர்மிசையிணையாகும்பொழிப்பிடையிட்டொரூஉவாம்
இருசீரிடையிட்டதிறுவாய்கூழைமுதலிறுவாய்
வருசீரயலிலமேல்கீழ்வகுத்தமைதீர்கதுவாய்
வருசீர்முழுவதுமொன்றின்முற்றாமென்பமற்றவையே.

இ-கை. இணைமோனைமுதலாகிய முப்பத்தைந்துதொடை விகற்பமுமாமாறுணர்த்து-ற்று. இருசீர்மிசையிணையாகும்-எ-து-முதலிருசீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத்தொடுப்பதுஇணையெனப்படும்-எ-று, பொழிப்பிடையிட்டு-எ-து முதற்சீர்க்கண்ணும், மூன்றாஞ்சீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத்தொடுப்பது பொழிப்பெனப்படும்-எ-று ஒரூஉவாமிருசீரிடையிட்டது-எ-து-நடுவிருசீர்க்கண்ணுமின்றி முதற்சீர்க்கண்ணும், இறுதிச்சீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத்தொடுப்பது ஒரூஉவெனப்படும்-எ-று, இறுவாய்கூழை எ-து-இறுதிச்சீர்க்கணின்றி யொழிந்தமூன்றுசீர்க்கண்ணும், மோனைமுதலாயின வரத்தொடுப்பது கூழையெனப்படும்-எ-று. முதலிறுவாய்வருசீரயலிலமேல் கீழ்வகுத்தமைதீர்கதுவாய்-எ-து-முதலயற்சீர்க்கணின்றியொழிந்தமூன்று சீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத்தொடுப்பது மேற்கதுவாயென்றும், ஈற்றயற்சீர்க்கணின்றியொழிந்தமூன்றுசீர்க்கண்ணும், மோனைமுதலாயின வரத்தொடுப்பது கீழ்க்கதுவாயென்றும், சொல்லப்படும்-எ-று. இதுநிரனிறைபொருள்கோள். என்னை "கடையயல் முதலயல் கதுவாய்க்கீழ்மேல் "என்றார் அவிநயனார் முதலயற்சீர்க்கணில்லாததனைக் கீழ்க்கதுவாயென்றும் ஈற்றயற்சீர்க்கணில்லாததனை மேற்கதுவாயென்றும், வேண்டினார்கையனார் முதலாகிய ஒருசாராசிரியரென்பதறிவித்தற்கு மைதீர்கதுவாயென்று விதப்புரைத்தாரெனக்கொள்க, வருசீர்முழுவது மொன்றின்முற்றாமென்ப-எ-து, எல்லாச்சீர்க்கண்ணும்மோனைமுதலாயினவரத்தொடுப்பது-முற்றெனப்படும்-எ-று. மற்றவையே-எ-து. இணைமோனைமுதலிய முப்பத்தைந்து தொடைவிகற்பமும்-எ-று, இது இறுதிவிளக்கெனக் கொள்க. சீர்முழுதுமொன்றின் முற்றாமென்னாது வருசீரொன்று சிறப்பித்தவதனால், இணைமோனைமுதலாகிய முப்பத்தைந்துதொடைவிகற்பமும், அளவடிக்கண்ணே வழங்கப்படுமென்பதூஉம் இணையியைபு முதலாகிய ஏழுவிகற்பமும், இறுதிச்சீரை முதற்சீராகக்கொண்டு வழ

எ-து, ஆ. "சீறடிப்பேரகலல்குலோய் தபு, சுருங்கிமருங்குசுப்பிற் பொருந்து வடந்தாங்கிக, குவிந்து கணங்கருமயிர்க்கொண்டைவிரிந்து, சிறியபெரிய நிகர்மலர்க்கோதைதன, வெள்வளைத்தோளுஞ் செயரிக்கருங்கணும், இருக்கையுநிலையுமேக்கெழிலிய பயகழும, துவரவாய்த்தீஞ்சொலு மல ங்கெனைமுனியாது, என்றுயினனணமாகுமகி, பொனறிகழ்நெடுவேற் போரயலலோயே,, இதனுளிணைமுரண் முதலாகியவேழுவிகற்பமும், முறையானே வந்தவாறுகண்டுகொள்க. அளபெடையினுள் விகற்ப மூகதாட்டாஅமனைமெனப-எ-து, "தாஅட்டாஅமனை மலருழக்கிப் பூஉகருவிளைபபோலுதருநதிக. அய்சசெங்கெற் கறித்துப்போஒ மாஅகதாஅண் மோஒட்டெருமை, தேஎம்புனலிடைச்சேஓர்பாஅல மீஇறாஅகதுகளுநு சிறு ஏஎறு அகீஇலிஇா, ஊரனசெயதகேண்மை ஆயவளை நதோளிககலாறுவே இதனுளிணையளபெடைமுதலாகியவே ழுவிகற்பமும், முறையானே வந்தவாறுகண்டுகொள்க, தானவிகற்ப மென்றுசிறப்பித்தவதனுல், இரண்டளபெடையும்வரப்பெறும் தாழ் குழலே-எ-து, மகடூஉமுன்னிலை. (உ௯)

முதலாவதுறுப்பியல்-முற்றிற்று.

கந்தமுந்தேனுஞ்சருக்கமுங்காதற்குயிலகுயிலே
சந்தமுந்திரசைதேமாந்தண்குன்றந்தண்சீர்திருவும்
கொந்தவிழ்கோதாய்குறடினைவெள்ளைககறதெழுவாய்
அந்தமுமாவுமிருசீருமோனையுமாமுறுபபே.

இஃது. உறுப்பியற்செய்யுட்களின முதனினைப்புக்காரிகை.

## இரண்டாவது

# செய்யுளியல்.

வெண்பாவகவல்கலிப்பாவளவடிவஞ்சியென்னும்
ஒண்பாவடிகுறள்சிந்தென்றுரைப்பவொலிமுறையே
இண்பாமலிசெப்பல்சீர்சாலகவல்சென்றேங்குதுள்ளல்
கண்பாவமைந்தநலமிததூங்கனறுநுதலே.

என்பது - காரிகை. இவ்வியலென்ன பெயர்த்தோவெனின், வெண் பா, வெள்ளொத்தாழிசை, வெண்டுறை,வெளிவிருத்தம், ஆசிரியப்பா, ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம்,கலிப்பா,கலித்தா ழிசை, கலித்துறை,கலிவிருத்தம், வஞ்சிப்பா,வஞ்சித்தாழிசை,வஞ்சித்

துறை, வஞ்சிவிருத்தம், மருட்பாவெனக்கிடந்தசெய்யுட்களையாமாறு ணாத்திற்றுதலாற் செய்யுளியலென்னும்பெயர்த்து, இவ்வியலுள் இக் காரிகையென்னுதலிற்றோவெனின், வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி யென்னும், நான்குபாவிற்கும், அடியுமோசையுமா மாறுணர்த்து-ற்று- வெண்பாவகவல் கலிப்பாவளவடி-எ து, வெண்பாவும், ஆசிரியப்பாவு ம்,கலிப்பாவும், நாற்சீரடியான்வரபபெறும்-எ-று, வஞ்சியென்னுமொ ண்பாவடிகுறள் சிந்தென்றுரைப்ப-எ-து, வஞ்சிப்பாஇருசீரடியானும், முச்சீரடியானும், வரப்பெறுமென்றுசொல்லுவர்புலவர்-எ-று, வஞ்சி யென்னு மொண்பாவென்று சிறப்பித்தவதனால், வெண்பாவினீற்றடி யும், நேரிசையாசிரியப்பாவினீற்றயலடியும், கலிவெண்பாவினீற்றடி யும், முச்சீரான்வரப்பெறுமென்றும், இணைக்குறளாசிரியப்பாவின் இ டையடிகளிரண்டும், பலவும், குறளடியானும், சிந்தடியானும், வரப் பெறுமென்றும், ஒருசார் அமபோதரங்கவுறுப்பும், இருசீரடியானும், முச்சீரடியானும் வரப்பெறுமென்றுங்கொளக, அராகவுறுப்புகள் நா ற்சீரின்மிக்கு வருவனவுமுளவெனக்கொள்க, அவைபோக்கித் தத்தம் இலக்கணசூத்திரத்துள்ளேகாட்டுதும், என்னை "கலியொடுவெண்பா வகவலகூறி, னளவடி தன்னொ னடக்குமற்றவையே, சிந்தடிகுறளடி யெ ன்றிரண்டடியான், வஞ்சிநடக்கும் வழக்கினையுடைய, என்றாராகலின், ஒலிமுறையே திண்பாமலிசெப்பல் சீர்சாலகவல் சென்றேங்குதுள்ள லண்பாவமைந்த நலமிகுதூங்கல்-எ-து, வெண்பா செப்பலோசையா ன்வரும், ஆசிரியப்பாஅகவலோசையான்வரும், கலிப்பா துள்ளலோ சையான்வரும், வஞ்சிப்பா தூங்கலோசையான் வரும்-எ-று, நறுநுத லே -எ-து, மகடூஉமுன்னிலை, திண்பாமலிசெப்பலென்று, சிறப்பித்த வதனால், செப்பலோசை மூன்றுவகைப்படும். ஏந்திசைச்செப்பலும், தூங்கிசைச் செப்பலும், ஒழுகிசைச் செப்பலுமென. என்னை "வெண் சீர் வெண்டளையான்வரும்யாப்பை, யேந்திசைச்செப்ப லென்மனார்பு லவர்,, "இயற்சீர்வெண்டளையா னவரும்யாப்பைத், தூங்கிசைச்செப்ப லென்மனார்புலவர்,, "வெண்சீரொன்றலுமியற்சீர்விகற்பமு, மொன்றி யபாட்டே யொழுகிசைச்செப்பல்" என்றாராகலின், அவற்றிற்குச்செ ய்யுள் வருமாறு-வெ - "யாதானுநாடாமலூராமாலென்னொருவன், சா ந்துணையுங்கல்லாதவாறு,, இதுவெண்சீர் வெண்டளையான் வந்தமை யால் ஏந்திசைச் செப்பலோசை-வெ. பாலொடு - வாலெயிறூறியநீர், இது இயற்சீர்வெண்டளையான் வந்தமையால், தூங்கிசைச்செப்பலோ சை-வெ "கொல்லான்புலாலை மறுத்தானைக்கைகூப்பி, எல்லாவுயிருந் தொழும்,, இது இரண்டுதளையும் விரவிவந்தமையால் ஒழுகிசைச்செப் பலோசை சீர்சாலகவலென்று சிறப்பித்தவதனால், அகவலோசை மூ ன்றுவகைப்படும் ஏந்திசையகவலும், தூங்கிசையகவலும், ஒழுகிசைய கவலுமென. என்னை "நேர்நேரியற்றளையான்வருமகவலு, நிரைநிரை

யற்றளையான்வருமகவலு, மாயிருதளையுமொத்தாகியவகவலு,மேந்தறூங்கலொழுகலென்றிவை, யாப்பதிரானின்றியாகுமென்ப,,என்றாராகலின். அவற்றிற்குச்செய்யுள்வருமாறு-ஆ"போதுசாந்தம்-துன்னுவாரோ,, இது நேரொன்றாசிரியத்தளையான் வந்தமையால் ஏந்திசையகவலோசை, ஆ "அணிநிழல் - பரிசறுப்பவரே.,, இது நிரையொன்றாசிரியத்தளையான் வந்தமையால் தூங்கிசையகவலோசை. ஆ "குன்றக்குறவன் கணங்கே.,, இது இரண்டுதளையும் விரவி வந்தமையால் ஒழுகிசையகவலோசை. சென்றேங்கு துள்ளலென்று சிறப்பித்தவதனால துள்ளலோசை மூன்றுவகைப்படும். ஏந்திசைத்துள்ளலும். அகவற்றுள்ளலும். பிரிந்திசைத்துள்ளலுமென, என்னை "ஏந்திசைத்துள்ளல கலித்தளையியையின, வெண்டளை தன்றளை யென்றிரண்டியையி, னொன்றியவகவற்றுள்ளலென்றோதுப,, தன்றளை பிறதளை யென்றிவையனைத்தும், பொருந்திவரினே பிரிந்திசைத்துள்ளல்,, என்றாராகலின். அவற்றிற்குச் செய்யுள்வருமாறு-க. "முருகவிழ்தாமரைமலர்மேன் முடியிமையோர் புடைவரவே, வருவினைகாதருமறை நூல்வழியிழையாமன முடையார், இருவினைபோய்விழமுனியா தெதிரியகாதியையறியா, திருமலராயருவினைசெய் திலவுவர்சோதியினிடையே,, இதுகலித்தளையான் வந்தமையால்ஏந்திசைத்துள்ளலோசை-க-"செல்வப்போர்-ஒளித்ததே,, இது வெண்சீர்வெண்டளையும், கலித்தளையும், விரவிவந்தமையால அகவற்றுள்ளலோசை-க "குடநிலைத்தண்புறவிற்கோவலரெடுத்தார்ப்பத், தடநிலைப்பெருந்தொழுவிற்றகையேறுமரம்பாய்ந்து, வீங்குமணிக்கயிறுரீஇத் தூங்குதுயவுத்தலைப்பாய்க், கலையினொடுமுயலிரியக் கடிமுல்லை மலர்வேய, எனவாங், காரொடுபுல்லிப்பெரும்புதன்முனையும், கானுடைத்தவர்தோ சென்றவாறே,, இது பலதளையும் விரவிவந்தமையால் பிரிந்திசைத்துள்ளலோசை, தண்பாவமைந்த கலம்சு தூங்கலென்று சிறப்பித்தவதனால், தூங்கலோசை மூன்றுவகைப்படும், ஏந்திசைத்தூங்கலும், அகவற்றூங்கலும், பிரிந்திசைத்தூங்கலுமென. என்னை ஒன்றியவஞ்சித் தளையேவரினு, மொன்றாவஞ்சித் தளையேவரினு, மென்றிவையிரண்டும் பிறவுமயங்கினு, மேந்தலகவல் பிரிந்திசைத்தூங்கலென், றுய்க்கநிலையாகுமென்ப என்றாராகலின், அவற்றிற்குச் செய்யுள்வருமாறு-வ "விலைநிதிண்பகை விழச்செற்றவன், வனப்பங்கயமலர்த்தாளிணை, நினைத்தன்பொடு தொழுதேத்தினர், நாளும் மயலார்காற்கதிமருவார், பெயராமேற்கதி பெறுகுவர்விரைந்தே, "இது ஒன்றியவஞ்சித்தளையான்வந்தமையால் ஏந்திசைத்தூங்கலோசை.வ "வானோர்தொழவண்டாமரைத், தேனார்மலர்மேல்வந்தரு, ளானவருங் கூறிவனைக், கானார்மலர்கொண் டேத்திவணங்குநர் பலர்புகழ்முத்தி பெறுகுவர்விரைந்தே," இது ஒன்றாவஞ்சித்தளையான் வந்தமையால்

அகவற்றூங்கலோசை "மந்தாநிலம்-மகிழ்மே,, இதுபலதளையும் விரவி வந்தமையாற் பிரிந்திசைத்தூங்கலோசை. (௧)

வளம்படவென்பதுவெள்ளைக்கவற்குதாரணஞ்செங்
களம்படக்கொன்றகலிக்கரிதாயகண்ணூர்கொடிபோல்
துளங்கிடைமாதேசுறமறிதொன்னலத்தின்புலம்பென்
றுளங்கொடுநாவலரோதினர்வஞ்சிக்குதாரணமே.

இ-கை. அவ்வடிகளானும், ஓசைகளானும்வந்த இலக்கியங்காட்டுதற்குத் தனினைப்புணர்த்து-ற்று, வளம்படவென்பது, வெள்ளைக்கு-உ-து "வளம்பட வேண்டாதார் யாவர்யாருமில்லை, அளந்தாமே போக்கமுமாவராயின், விளங்காய்திரட்டினாரில்லைக்களங்கனியைக், காரோடமெய்தாருமில்,, இஃதளவடியானும், செப்பலோசையானும், வந்த இவ்வினைவெண்பா, அகவற்குதாரணஞ் செங்களம்படக்கொன்று-எ-து. "செங்களம் படக்கொன்றவுணாத்தேய்த்த, செங்கோலம்பின் செங்கோட்டியானை, கழற்றொடிச்சேஎய்க்குன்றம், குருதிப்பூவின குலைக்காந்தட்டே,, இஃதளவடியானும், அகவலோசையானும்வந்த நேரிசையாசிரியப்பா கலிக்கரிதாய-எ-து, "அரிதாயவறனெய்தி யருளியோர்க்களித்தலும், பெரிதாயபகைவென்று பேணாரைத்தெறுதலும், புரிவமர்காதலிற்புணர்ச்சியுந்தருமெனப், பிரிவெண்ணிப்பொருள்வயிற் சென்றநங்காதலர், வருவர்கொல்வயங்கிழாய் வலிப்பலயானகேளினி,, இதுதரவு. அடிதாங்குமளவின்றி யழலன்னவெம்மையாற், கடியவேகனங்குழாய காடென்றார்க்காட்டுள், துடியடிக்கயந்தலைக கலங்கியசின்னீரைப், பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவுமுரைத்தனரே. இனபத்தினியந்தாரிஇ யிலதியைந்தவுலவையால, துன்புறூஉந்தகையவேகா டென்றார்காட்டுள், அன்புகொண்மடப்பெடையசைஇயவருத்தத்தை, மென்சிறகரா லாற்றும் புறவெனவுமுரைத்தனரே, கன்மிசைவேயவாடக கனைகதிர் தெறுதலால், துன்னரூஉந்தகையவேகாடென்றார்காட்டுள், இன்னிழலின்மையால் வருந்தியமடப்பிணைக்குத், தன்னிழலைக்கொடுத்தளிக்குங் கலையெனவுமுரைத்தனரே. இவைமூன்றுந்தாழிசை, எனவாங்கு தனிச்சொல், இனநலமுடையகானஞ்சென்றோர், புனைநலம்வாட்டுந ரல்லர்மனைவயிற், பல்லியம்பாங்கொத்திசைத்தன, நல்லெழிலுண்கணு மாடுமாலிடனே,, இதுசுரிதகம், இஃதளவடியானும், துள்ளலோசையானும், வந்தமையால்நேரிசையொத்தாழிசைக்கலிப்பா, கண்ணூர்கொடிபோற் றுளங்கிடைமாதே-எ-து. மகடூஉமுன்னிலை. சுறமறிதொன்னலத்தின் புலம்பென்றுளங்கொடுநாவலரோதினர் வஞ்சிக்குதாரணமே எ-து" சுறமறிவனதுறையெல்லாம், இறவீன்பனவிலவெலலாம், மீன்றிரிவனகிடங்கெல்லாம், தேன்சொரிவனபொழிலெல்லாம், எனவாங்கு தண்பணைதழீஇயவிருக்கை, மண்கெழுநெடுமதின் மன்னனூரே. "இஃ

இருசீரடியானும், தூங்கலோசையானும் வந்தமையால், குறளடிவஞ்சிப்பா, "தொன்னலத்தின்புலம்பலைப்பது தொடித்தோண்மேல், பன்னலத்தகலந்தொலையப்பரிவெய்தி, என்னலத்தகையிதுவென்னவெழில்காட்டிச், சொன்னலத்தகைப் பொருளகருத்தினிற்சிறந்தாங், கெனப்பெரிதும், கலங்கஞரெய்திவிடுப்பவும், நிலமைபடைச்செலவுஞ் சேணிவந்தற்றே" இது மூச்சீரடியானும், தூங்கலோசையானும், வந்தமையாற் சிந்தடிவஞ்சிப்பா, உதாரணமேயென்பது இறுதிவிளக்காகக் கொள்க. (உ)

ஈரடிவெண்பாக்குறள்குறட்பாவிரண்டாயிடைகட்
சீரியவான்றனிச்சொல்லடிமூய்ச்செப்பலோசைகுன்று
தோரிரண்டாயுமொருவிகற்பாயும்வருவநுண்மேடல்
நேரிசையாகுநெரிசுரிபூங்குழனேரிழையே.

இ-கை. குறள்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா, நேரிசைசிந்தியல்வெண்பா, இன்னிசைசிந்தியல்வெண்பா-எ-ம். நேரிசையாசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா, நிலைமண்டிலவாசிரியப்பா, அடிமறிமண்டிலவாசிரியப்பா -எ-ம, நேரிசையொத்தாழிசைக்கலிப்பா, அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா, வண்ணகவொத்தாழிசைககலிப்பா, கலிவெண்பா, வெண்கலிப்பா, தரவுக்கொச்சகக்கலிப்பா, தரவிணைக்கொச்சகக்கலிப்பா, சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா, பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா, மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா-எ-ம. குறளடிவஞ்சிப்பா, சிந்தடிவஞ்சிப்பா எ-ம், புறநிலைவாழ்த்துமருட்பா, கைக்கிளைமருட்பா, வாயுறைவாழ்த்துமருட்பா, செவியறிவுறூஉமருட்பா-எ-ம், கிடந்தபாவிகற்பங்களுட் செப்பலோசையுடைத்தாய், ஈற்றடிமுச்சீராய், ஏனையடிநாற்சீராய், வெண்சீரும், இயற்சீரும்வந்து, வெண்டளைதட்டு, வேற்றுத்தளைவிரவாது, காசு,பிறப்பு, நாள்- மலரொன்றும் வாய்பாட்டாலிறும் வெண்பாவினை அடியானும்-தொடையானும, ஓசையானும,பெயராலேயும்பாடுணர்த்து வானெடுத்துக்கொண்டார், அவற்றுள், இக்காரிகை. குறள்வெண்பாவும், நேரிசைவெண்பாவு மாமாறுணர்த்து - ற்று, ஈரடிவெண்பாக்குறள்-எ-து, இரண்டடியான்வரும் வெண்பா குறள் வெண்பாவெனப்படும் - எ-று, என்னை-தொடையொன்றடியிரண்டாகிவருமேற்,குறளின்பெயர்க்கொடைகொள்ளப்படுமே"என்றார்காக்கை பாடினியார், "உருவுகண்டெள்ளாமைவேண்டுமுருள்பெருந்தேர்க்,கச்சாணியன்னாருடைத்து,,உடையார்முன்னில்லார் போலேக்கற்றுங்கற்றார், கடையரே கல்லாதவர்" இவையிரண்டடியான் இரண்டுவிகற்பத்தானும், ஒருவிகற்பத்தானும் வந்தகுறள்வெண்பா- குறட்பாவிரண்டா யிடைக்கட்சீரியவான் றனிச சொன்னடிமூய்ச் செப்பலோசை குன்று தோரிரண்டாயு மொருவிகற

பாயும் வருவதுண்டேனேரிசையாகும்-எ-று. இரண்டுகுறள்வெண்பாவாய் நடுவுமுதற்றொடைக்கேற்ற தனிச்சொலலாலடிநிரம்பிச், செப்பலோசைவழுவாது முதலிரண்டடியும், ஒருவிகற்பமாய்க், கடையிரண்டடியுமற்றொருவிகற்பமாய்வரினும், நாலடியும், ஒருவிகற்பமாய் வரினும், இருகுறணேரிசை வெண்பாவெனப்படும் எ-று. வ-று. "தடமண்டு தாமரையின்றா தாடலவன், இடமண்டிச் செலவாதனைக்கண்டு, பெடைகொண்டு, பூழிக்கதவடைக்கும்புக்தூரீரே பொய்கடிந், நாழிடையினூர் "அரியவனைஇண்டு சாட்டுவார்யாரே, பெரியவனை வயிரங் கொண்டுதெரியில், கரியவனைஇலையார் காய்ந்தாலென்செய்வார், பெரியவனைவயிரங்கொண்டு." இவை இரண்டுகுறள்வெண்பாவாய் நடுவுமுதற்றொடைக்கேற்ற தனிச்சொலலாலடிநிரம்பிச் செப்பலோசை வழுவாது இரண்டுவிகற்பத்தானும், ஒருவிகற்பத்தானும் வந்த இருகுறணேரிசைவெண்பா, சீரியவான்றனிச் சொல்லடிமுயென்று சிறப்பித்தவதனால், முதற்குறட் பாவினோடு தனிச்சொல்லிடை வேறுபடுவிட்டிசையின் ஒற்றுமைப்படாத உலோகங்களை ஒற்றுமைப் படப்பற்றுசிட்டு விளக்கினாற்போல, முதற்குறட்பாவினிறுதிக்கணென்றம இரண்டும்அசைகூட்டி புசாரிக்கப்பட்டு இரண்டுவிகற்பத்தானும் ஒருவிகற்பத்தானும் வருவனவுமுள, அவை ஒருசாராசிடை நேரிசைவெண்பாவெனக்கொள்க. வ-று. "தாமரையின்றாதாடித்தண்டுவலைச்சேறளைந்து, தாமரையினூற்றமேதானுறும், தாமரைபோற, கண்ணான்முகத தான்கரதலத்தான்சேவடியென், கண்ணான்வஞ்சிசெய்யுங்கருத்து,, கருமமுமுள்படாப்போகமுந்துவ்வாத். தருமமுந்தகார்க்கேசெய்யா, ஒருநிலையே, முட்டினறிமுலைறா முடியுமேமைகேகென்ப, பட்டினம்பெற்றகலம்" இவைமுதற் குறட்பாவிறுதிக்கணீரசையானும, ஓரசையானும ஆசிட்டு இரண்டுவிகற்பத்தான்வந்த, ஆசிடைநேரிசைவெண்பா, "ஆர்த்தவறிவினராண்டிளை யராயினும், காத்தோம்பித் தம்மைமடக்குபா-மூத்தொறூஉம், தீத்தொழிலேகன்றித் திரிதந்தெரிவைபோற், போதநர்புல்லறிவினார், "வஞ்சியமெனன்றவன்ற ஊர நனைத்தான் யானுமவன், வஞ்சியனென்பதறிலவாய் நேர்ந்தேன - வஞ்சியான், வஞ்சியேன் வஞ்சியேனென்றுரைத்தும் வஞ்சித்தான். வஞ்சியாயவஞ்சியார்கோ" இவைமுதற் குறட்பாவின் இறுதிக்கண் ஓரசையானும், ஈரசையானும், ஆசிட்டு ஒருவிகற்பத்தான் வந்தஆசிடைநேரிசைவெண்பா, நெரிசுரிபூங் குழனேரிழையே-எ-று. மகடூஉமுன்னிலை, வெண்பாவகவல் கலிப்பாவளவடிவஞ்சியென்றுங் காரிகையுள், வெண்பாசெப்பலோசையான் வருமென்றும், ஈண்டுஞ்செப்பலோசை குன்றுதென்றுங்கூறியது, கூறியது கூறிற்றாகாது, என்னை "கூறியதுகூறினுங் குற்றமில்லை, வேறொருபொருளைவிளக்குமாயின்" என்றாரகலின் ஒருசார்பிறயாக்கைகளோதுந்தக் உதாரணவாய்பாட்டால் ஓசையூட்டுமொழு

து-தத்தமோசையிற் சிறிதுவழுவி வருவனவுளவாயினும், வெண்பாவிற்குச்சிறிதும் செப்பலோசைவழுவலாகாதென்று யாப்புறுத்தற்பொருட்டாகவும், செப்பலோசையிற் சிறிதுவழுவிவந்தநேரிசை இன்னிசைவெண்பாக்களை ஒருபுடை யொப்புமைநோக்கி வெண்டுறைப்பாற் படுத்துவழங்கினும். இழுக்கான்றெனபதறிவித்தற் காகவு மெனக்கொள்க. என்னை" தத்தமபாவினத்தொப்பினுங்குறையினு, மொன்றொன்றொவ்வாவேற்றுமைவகையாற், பாக்கமலனைமேலாவாயிற், பண்போல விகற்பம்பாவினததாகும்,, "குறட்பாவிரண்டடி நால்வகைத்தொடையான், முதற்பாதனிச் சொலினடி மூவுயிரண்டு, விகற்பினப்பவனநேரிசைவெண்பா "என்றாரவிநயனார், "இரண்டாமடியினிறுதியொரூஉவெய்தி முரண்டவெதுகையதாகினு மாகாதிரண்டுதுணியாகிடை தனிபோழ்ந்து, பிரந்தடிநான்கினனேரிசைவெண்பா. "என்றார்காக்கைபாடினியார்.

உருவுகண் டெள்ளாவுடையார்குறண்மடவாய்தடமண்
டரியவனாகிண்டிரு குறமணேரிசைகாமலாயின்
கருமமுமாத்தவுமவஞ்சியுங்காமர்தனிசசொன்முன்று
நேரிநுண்கருங்குழனேரிழையாசிட்டநேரிசையே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே குறள் வெண்பாவிற்கும், நேரிசைவெண்பாவிற்கும், ஆசிடைநேரிசைவெண்பாவிற்குங்காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (௩)

ஒன்றும்பலவும்விகற்பொடுநான்கடியாய்த்தனிசசொல்
இன்றிநடப்பினஃதின்னிசைதுன்றுமடிபலவாய்ச்
சென்றுநிகழ்வபஃறொடையாஞ்சிறைவண்டினங்கள்
துன்றுங்கருமென்குழற்றுடியேரிடைத்தூமொழியே.

இ-கை. இன்னிசைவெண்பாவும், பஃறொடைவெண்பாவுமாமாறுணர்த்து-ற்று, ஒன்றும்பலவும் விகற்பொடுநான் கடியாய்த்தனிச்சொலின்றிநடப்பினஃதின்-னிசைதுன்னும்-எ-து. ஒருவிகற்பத்தானும்,பலவிகற்பத்தானும், வந்துநான்கடியாய்த் தனிச்சொலமில்லாமல நடப்பினஃதின்னிசைவெண்பாவெனப்படும்-எ-று. வ-று. "வைகலும் வைகல்வரக் கண்டுமஃதுணரார், வைகலும்வைகலை வைகுமென்றின் புறுவர், வைகலும்வைகற்றம்வாழ் நாண்மேல்வைகுதல, வைகலைவைத்துணராதார்,, "துகடீர்பெருஞ்செல்வந் தோன்றியக்காற்றொட்டுப், பகடு நடந்தகூழ்பல்லாரோடுண்க, வகடுறயார்மாட்டுநில்லாதுசெல்வம், சகடக்காற்போலவரும்" இவைநான்கடியாய்த் தனிச்சொல்லின்றி ஒருவிகற்பத்தான், வந்த இன்னிசைவெண்பா, "கடற்குட்டம்போழ்வர் கலவர்படைக்குட்டம், பாய்மாவுடையா னுடைக்கிற்குந்தோமில், தவ

க்குட்டங்கன் ஞானையா னீக்நாமனைவக்குட்டம், கற்றுன் கடக்துவிடும். இன்று கொலன்று கொலென்று கோலென்றது, பிணையையேகின்றது கூற்றமென்றெண்ணி, ஒருவுமின்றீயவை யொல்லும்வகையான், மருவுமின்மாண்டாரறம்" இவை நான்கடியாய்த் தனிச்சொலின்றிப்பல விகற்பத்தான்வந்த இன்னிசைவெண்பா - ஒன்றல்லனவெல்லாம் பல வென்பது தமிழ்நடையாகலின், என்னை "ஒன்றலலவையபலதமிழ்நடை வடநூ, லிரண்டல்லவைபலவென்றிசினோரே" என்றாராகலின், துன்னு மென்று மிகுத்துச்சொல்லியவதனால், இரண்டாமடியினிறுதி தனிச் சொற்பெற்று மூன்றுவிகற்பத்தான் வருவனவும், மூன்றாமடியினிறுதி தனிச்சொற்பெற்று இரண்டுவிகற்பத்தான் வருவனவும், தனிச்சொல் லின்றிப் பலவிகற்பாய், அடிதோறும் ஒருஉதொடை பெற்றுவருவ னவும், பிறவாற்றானு நேரிசைவெண்பாவிற் சிறிதுவேறுபட்டு நான்க டியான்வருவனவும், இன்னிசைவெண்பாவெனப்படும்-எ-று. "அங்க ணவிசும்பினகனிலாப்பாரிக்குந், திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற் றிங்கள், மறுவாற்றுஞ்சான்றோ ரஃதாற்றார்தெருமந்து, தேய்வரொரு மாசுறின்" "மலிதேரான்கச்சியுமாகடலுந்தம்முள், ஒலியும்பெருமையு மொக்கு, மலிதேரான், கச்சிபடுவ கடல்படாகச்சி, கடல்படுவ வெல் லாம்படும்" இவையிரண்டாமடியி னிறுதிதனிச்சொற்பெற்று மூன்று விகற்பத்தான்வந்த இன்னிசைவெண்பா- "வளம்படவேண்டா - செய் தாரியில" இதுமூன்றாமடியினிறுதிதனிச்சொற்பெற்று இரண்டுவிகற் பத்தான்வந்த இன்னிசைவெண்பா "இன்னாமைவேண்டினிரவெழுக, இந்நிலத்து, மன்னுதலவேண்டினிசைநடுக, தன்னொடு, செலவதுவே ண்டினறஞ்செய்க, வெல்வது, வேண்டின்வெகுளிவிடல்" இவையடி தோறுந் தனிச்சொற்பெற்று மூன்றுவிகற்பத்தான்வந்த இன்னிசைவெ ண்பா- "மழையினறி மாநிலத்தார்க்கில்லை, மழையும், தவமிலாரில்வழி யில்லை, தவமும், அரசிலாரில்வழியிலலை அரசனும், இல்வாழ்வாரிலவ ழியில" இஃதடிதோறுமொரூஉதொடைபெற்று நேரிசைவெண்பா விற் சிறிதுவேறுபட்டு வந்தமையான் இன்னிசைவெண்பா. பிறவும்வந் துழிக்கண்டுகொள்க. என்னை "தனிசசொற்றழுவலவாகிவிகற்பம், பல பலதோன்றினு மொன்றேவரினு, மிதற்பெயரினனிசை யென்றிசினோ ரே" "ஒருவிகற்பாகித் தனிச்சொலின்றியு, மிருவிகற்பாகித்தனிச்சொ லின்றியுந், தனிச்சொற்பெற்றுப் பலவிகற்பாகியுந், தனிச்சொலின்றிப் பலவிகற்பாகியு, மடியடிதோறுமொரூஉத்தொடையெனவு, மெனனை ந்தாகுமின்னிசைதானே, என்றார்பிறருமெனக்கொள்க, அடிபலவாய்ச் சென்று நிகழ்வபஃறொடையாம் - எ - து. நான்கடியின்மிக்க பலவ டியான்வருவது பஃறொடைவெண்பாவெனப்படும்-எ-று. நேரிசைவெ ண்பாவிற்கும், இன்னிசைவெண்பாவிற்கும், நான்கடியேயுரிமைசொ ன்னமையான் நான்கடியின்மிக்கபலவடியால் வருமென்பதாற்றலாற்

போந்தவொருவனைக் கண்டுகொள்க-வ-று, வையகமெல்லாங் கழனியாவையகத்துச, செய்யகமேனாற் றிசையினதேயங்கள், செய்யகத்து, வான்கரும்பே தொண்டைவளநாடு, வான்கரும்பின், சாறேயந்நாட்டுத்தலையூர்கள், சாறட்ட, கட்டியேகச்சிப்புறமெல்லாங், கட்டியுட், டாணேற்றமான சருக்கரைமாமணியே, ஆனேற்றான் கச்சியகம் "இதுபலவிகற்பத்தான் வந்தஏழடிப் பஃறொடைவெண்பா, "சேற்றுக்கானீலஞ் செருவென்றவேந்தன்வேல், கூற்றுறழ்மொய்ம்பிற் பகழிபொருகயற், றேற்றந்தொழிலவடிவுகம்மூட்டுமாறும், வேற்றுமையின்றியேயொத்தனமாவேட்டர், ஆறடிக்காலாட்டியர்கண் "இஃதுஐந்தடியான்வந்த ஒருவிகற்பப்பஃறொடைவெண்பா, "பண்மாடக்கூடன் மதுரைநெடுந்தெருவில, என்னோடுநின்றாரிருவரவருள்ளும், பொன்னோடைநன் றென்றாளல்லளே பொன்னோடைக், கியானைநன்றென்றாளு மந்நிலையள்யானை, எருத்தத்திருந்த விலங்கிலைவேற்றென்னன், றிருத்தார்நன் றென்றேன்றியேன்,, இஃது ஆறடியான்வந்த பலவிகற்பப் பஃறொடைவெண்பா, இனிஏழடியின்மிக்க பஃறொடைவெண்பாக்களை யாப்பருங்கலவிருத்தியுட் கண்டுகொள்க, சென்றுநிகழ்வவென்றி சிறப்பித்தவதனால் செப்பலோசையிற் சிறிதுவழுவிவந்த பஃறொடைவெண்பாக்களை ஒருபுடையொப்புமைநோக்கிவெண் கலிப்பாற்படுத்துவழங்கினு மிழுக்காதென்ப தறிவித்தற்கெனக்கொள்க, சிறைவண்டினங்கடுன்றுங் கருமென்குழற்றுடியே ரிடைத்தூமொழியே-எ-து. மகடூஉமுன்னிலை, என்னை தொடையடியித்துணை யென்னும்வழக்க, முடையதையின்றியுறுப்பழிவில்லா, நடையதுபஃறொடை நாமங்கொளலே, என்றார் காக்கைபாடினியார். (௬)

வைகலும்வைகறுகவூர்கடற்குட்டமின்றுமங்கண்
எய்துமலிதேர்வளமழையின்னனவின்னிசைபோல்
வையகமெல்லாம்பலவிகற்பேற்றருசேற்றொருகால்
பையரவல்குற்பன்மாடம்பஃறொடைப்பல்விகற்பே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே இன்னிசைவெண்பாவிற்கும், பஃறொடைவெண்பாவிற்கும், காட்டிய இலக்கியங்களை முதனினைந்துக்கொள்க.

நேரிசையின்னிசைபோலநடந்தடிமூன்றின்வந்தால்
நேரிசையின்னிசைச்சிந்தியலாகுங்கரில்வெள்ளைக
கோரசைச்சீருமொளிசேர்பிறப்புமொண்காசுமிற்ற
சீருடைச்சிந்தடியேமுடிவாமென்றுதேறுகவே.

இ-கை. நேரிசைச்சிந்தியல்வெண்பாவும், இன்னிசைச்சிந்தியல்வெண்பாவும், எல்லாவெண்பாவிற்கு மீறுமாறுமுணர்த்து-ற்று - நேரிசை

யின்னிசைபோல நடந்தடிமூன்றின் வந்தானேரிசையின்னிசைச் சிந்
தியலாகும்-எ-து, நேரிசைவெண்பாவேபோல இரண்டாமடியி னிறுதி
தனிச்சொற்பெறறு இருவிகற்பத்தானும், ஒருவிகற்பத்தானும், மூன்
றடியான்வருவன நேரிசைச்சிந்தியல் வெண்பாவெனவும், இன்னிசை
வெண்பாவேபோலத் தனிச்சொலின்றி ஒருவிகற்பத்தானும், பலவிக
ற்பத்தானும், மூன்றடியான்வருவன இன்னிசைச்சிந்தியல வெண்பா
வெனவும் வழங்கப்படும்-எ-று, என்னை "நேரிசைச்சிந்து மின்னிசை
ச்சிந்துமென், றீரடிமூக்காலிருவகைப்படுமே" என்றாராகலின், வ-று,
நற்கொற்றவாயினறுங்குவளைத்தாரசொண்டு, சுற்றும்வண்டார்ப்பப்பு
னைத்தாளே, பொற்றேரான், பாலைநல்வாயின்மகள்,, "அறிந்தானை
யேத்தியறிவாங்கறிந்து, சிறந்தார்க்குச்செல்வநுரைப்ப, சிறந்தார்,சிற
ந்தமையாராய்ந்துகொண்டு,, இவை இரண்டாமடியினிறுதிதனிற் சொ
ற்பெற்று இருவிகற்பத்தானும், ஒருவிகற்பத்தானும்வந்த நேரிசைச்சி
ந்தியல்வெண்பா. "நறுநீலநெய்தலுங் கொட்டியுந்தீண்டிப, பிறநாட்டு
பபெண்டிர் முடிநாறும்பாரிரில, அறநாட்டுப்பெண்டிரடி,, இது தனிச்
சொலின்றி ஒரு விகற்பத்தான்வந்த வின்னிசைச சிந்தியல்வெண்பா.
சுரையாழவம்மி மிதப்பவரையனைய, யானைக்குநீத்து முயற்குநிலையெ
ன்ப, கானகநாடன்சுனை,, "முல்லைமுறுவலித்துக்காட்டினமெல்லவே,
சேயிதழ்க்காந்த டும்பயின்றபோயினுர், திண்டேர்வரவுரைக்குங்கார்,
இவைதனிசசொலின்றிப் பலவிகற்பததான்வந்த இன்னிசைச்சிந்தியல்
வெண்பா.

நற்கொற்றவாயிலறிந்தானையு நறும்பூங்குழலாய்
சொற்பெற்றநேரிசைச்சிந்தியலாஞ்சுரையாழவம்மி
யிற்றற்குரியநறுநீலநெய்தலு முல்லையுமென்
றெற்றப்படாதனவின்னிசைசசிந்திற்கிலக்கியமே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே நேரிசைச்சிந்தியல் வெண்
பாவிற்கும், இன்னிசைச்சிந்தியல்வெண்பாவிற்குங்காட்டிய இலக்கியங்
களை முதனினைத்துக்கொள்க. நிகரிலவெள்ளைக் கோரசைச்சீருமொழி
சேர் பிறப்புமொண்காசுமிற்ற சீருடைச் சிந்தடியேமுடிவாமென்று
தேறுகவே-எ-து: எல்லாவெண்பாவிற்கு நாளென்னும் நேரசைச்சீரா
னும், மலரென்னு நிரையசைச்சீரானும், காசுபிறப்பென்னும் வாய்பா
ட்டிற் குற்றியலுகரமீறுகிய நேரீற்றியற்சீரானும், இற்றமுச்சீரடியேயீ
ற்றடியாவதென்றுதெளிக-எ-று, வெண்பாவி னிறுதிச்சீர்க்குக் குற்றி
யலுகரமீறாக வேறுதாரணை யெடுத்தோதியதூஉம், அசைசசீர்க்குதார
ணம் வேறுகாட்டிப்போந்ததூஉம். பெண்பாவினை அலகிட்டுதொண

வாய்பாட்டா னோசையூட்டும்பொழுது, பிறவாய்பாட்டானோசை யூட்டலர்க்காகவினெனக்கொள்க இனியவ்வாற்றா னோசையூட்டுமாறு."பாலொடு-தீர்,, என்பதனை அலகிட்டு, முறையானே, கூவிளம்,கூவிளம் தேமா, கருவிளம், கூவிளம், கூவிளம், நாள்-என்றோசையூட்டுக. "நன்றறிவாரில்-அவல்மிலர்,, என்பதனை அலகிட்டு, முறையானே கூவிளம் தேமா-புளிமா-கருவிளங்காய் தேமா-புளிமா-மலர் என்றோசையூட்டுக மங்கலமென்ப மனைமாட்சிமற்றத, னன்கலனன்மக்கட்பேறு,, என்பதனை அலகிட்டுமுறையானே கூவிளம் தேமா புளிமாங்காய் கூவிளம் கூவிளம் தேமாங்காய் காசுஎன்றோசையூட்டுக "அகரமுதல வெழுத்தெல்லாமாதி, பகவன்முதற்றேயுலகு,, என்பதனை அலகிட்டுமுறையானே புளிமா புளிமா புளிமாங்காய் தேமா புளிமா புளிமா பிறப்பு என்றோசையூட்டுக, பிறவெண்பாக்களையும், இவ்வாறலகிட் டோசையூட்டிச்செய்பவோசை வழுவாமற்கண்டுகொள்க.பிகரிலவெள்ளைக்கென்று சிறப்பித்தவதனால், குறள்வெண்பாவினை ஓரடிமுக்காலென்றும், சிந்தியல் வெண்பாவினை ஈரடிமுக்காலென்றும், நேரிசைவெண்பாவினை மூவடிமுக்காலென்றும், இன்னிசை வெண்பாவினை இன்னிசை மூவடிமுக்காலென்றும், பஃறொடைவெண்பாவினைப் பலவடிமுக்காலென்றும், பெயரிட்டுவழங்குவ ரொருசாராசிரியரெனக்கொள்க. ஒளிசேர் பிறப்பு மொண்காசுமென்று சிறப்பித்தவதனாற் காசுபிறப்பென்னும் வாய்பாட்டான் முற்றியலுகரமீறாகிய நேரீற்றியற்சீரிறுதியாகிய மூசீரடியானு மிறுவனவுமுள ஒருசார்வெண்பாவென்ப தறிவித்தற்கெனக்கொள்க, வ-று. "மஞ்சுசூழ்சோலை மலைநாட மூத்தாலும், அஞ்சொன் மடவார்க்கருளு,, இதுபிறப்பென்னும் வாய்பாட்டான் முற்றியலுகரமீறாயிற்றவெண்பா "இலைமலர்க்கோதா யிலங்குநீர்ச்சேர்ப்பன், புனைமலர்த்தாரகலம்புல்லு,, இதுகாசென்னும் வாய்பாட்டான்முற்றியலுகரமீறாயிற்றவெண்பா.இவைசெய்யுளியலுடையார் காட்டியவெனக்கொள்க. என்னை "செப்பலிசையனவெண்பாமற்றவை, யந்தடி சிந்தடியாகலுமவ்வடி, யந்தமசைசீராகவும்பெறுமே,, என்பதியாப்பருங்கலம்." குற்றியலுகரமு முற்றியலுகரமும், பெற்றவாய்பாட்டா னின்றிறுமென்ப,, என்றாராகலின, "மாவாழ்புலிவாழ் சுரமுளவாகமணியிறுவாயோவாதளபெடுத்தூஉங் கெழூஉவுமுதாரணமாய்,நாவார்பெரும்புகழ் நத்தத்தர் யாப்பினடந்ததுபோல், தேய்வாமுகரம்வந்தாலியற்சீர்க்குச் செப்பியதே,, இக்காரிகைச் சூத்திரத்துள் ஓசையூட்டுதற் கருத்தாவது மாவாழ்சுரம், புலிவாழ்சுரமென்னும், வஞ்சியுரிச்சீரிரண்டுமுளவாக வைத்து ஒருபயனோக்கித்தூஉமணி கெழூஉமணி என்றளபெடுத்து சேர்க்கவோங்கியவஞ்சி யுரிச்சீர்க்குதாரண மெடுத்துக்காட்டினார் நத்தத்

தனார் முதலாகிய வொருசாராசிரியர், அதுவேபோல இந்நூலுடையா ரும் தேமா புளிமாவென்னு மிரண்டுசீரீற்றியற்சீரு முளவாக வெண் பாவி னிறுதிச்சீர்க்கு உதாரணவாய்பாட்டானுரைசூட்டுதற்பொரு ட்டாகக் குற்றியலுகரமிறுகிய காசுபிறப்பென்னும் வாய்பாட்டானே யீற்றியற்சீருக வேறுதாரண மெடுத்தோதினரெனக்கொள்க. (௫)

அந்தமில்பாதமளவிரண்டொத்துமுடியின்வெள்ளைச்
செந்துறையாகுந்திருவேயதன்பெயர்சீர்பலவாய்
அந்தங்குறைனவுஞ்செந்துறைப்பாட்டினிழிபுமங்கேழ்
சந்தஞ்சிதைந்தகுறளுங்குறளினத்தாழிசையே.

இ-கை குறள்வெண்பாவிற் கினமாகிய துறையும், தாழிசையுமாமா றுணர்த்து-ற்று. அந்தமில்பாதமள விரண்டொத்து முடியின்வெள்ளை ச்செந்துறையாகும்-எ-து- இரண்டடியாய்த்தமுள்ள வொத்துவருவது வெண்செந்துறையென்றும், செந்துறைவெள்ளையென்றும், பெயரிட்டு வழங்கப்படும்-எ-று. அந்தமில்பாதமென்று சிறப்பித்ததனல், விழு மியபொருளும், ஒழுகியவோசையுமுடைத்தாய்வருவதெனக்கொள்க, என்னை "ஒழுகியவோசையி னொத்தடியிரண்டாய், விழுமியபொருளது வெண்செந்துறையே. என்பதியாப்பருங்கலம்-வ-று. ஆர்கவியுலகத்து மக்கட்கெல்லாம், ஓதலிற்சிறந்தன் றொழுக்க முடைமை,, "கொன்றை வேய்ந்தசெல்வனடியிணை, என்றுமேத்தித்தொழுவோமியாமே, இவை விழுமியபொருளும், ஒழுகியவோசையுமாய் வந்தமையான் வெண்செ ந்துறை, திருவே-எ-து-மகடூஉமுன்னிலை,சீர்பலவாயந்தங்குறைனவும்- எ-து-நாற்சீரின்மிக்க பலசீரான்வந்து அடியிரண்டாய் ஈற்றடி குறைந் துவருவன குறட்டாழிசையெனப்படும்-எ-று, இரண்டடி யென்பததி காரம் வருவித்துரைக்கப்பட்டது, குறட்டாழிசையெனினும்,தாழிசை க்குறளெனினு மொக்கும், சீர்வகூர யறையிலாமையால் பலத்துச் சீரானும்,அடியானும்.வரப்பெறுமெனக்கொள்க, வ-று. "நண்ணுவார் வினை நையநாடொறு நற்றவர்க்கரசராயஞானநற், கண்ணினனடியே யடைவார்கள் கற்றவரே,, "நீலமாகடனீர்வார் திரைநின்றபோற்பொங் கிப் பொன்றுமாங்கவை, காலம்பலகாலஞ்சென்றுஞ் செல்வர்யாக்கை சழிதலுமே,, எ-று, இவை ஈற்றடிகுறைந்து இரண்டடியாய்ப் பலசீரா ன்வந்தமையால், குறட்டாழிசை, செந்துறைப்பாட்டி னிழிபும்-எ-து. அடியிரண்டாய் அளவொத்துவிழுமியபொருளும், ஒழுகிய வோசையு மின்றி இவ்வாறே செந்துறைவெள்ளையிற்பிறைந்து வருவனவெல்லா ஞ்செந்துறைச் சிதைவுத்தாழிசைக்குறளெனப்படும்-எ-று.வ-று."பின் டியினீழற் பெருமான்பிடர்த்தலை,, மண்டலந்தோன்று மால்வாழியன்

ளாய்,, "அறுவர்க்கறுவரைப்பெற்றுங்கெளந்தி, மறுவறுபத்தினிபோல் லையபினீரோ,, இவை விழுமியபொருளும், ஒழுகியவோசையுமின்றி இரண்டடியுந் தம்முளொத்து வந்தமையிற் செந்துறைச் சிதைவுத்தாழிசைக்குறள். அங்கேழ்சந்தஞ்சிதைந்தகுறளுங் குறளினத்தாழிசையே-எ-து, செப்பலோசையிற் சிதைந்துவேற்றுத் தளைதட்டுக் குறள்வெண்பாவிற் சிதைந்துவருவன வெல்லாங்குறள்வெண்பாவிற்கினமாகிய குறட்டாழிசையெனப்படும். "வண்டார்பூங்கோதை வரிவளைக்கைத்திருநுதலாள், பண்டையளல்லள்படி,, இதுசந்தஞ்சிதைந்ததாழிசைக்குறள். என்னை "அந்தடிகுறைணவுஞ் செந்துறைச்சிதைவுஞ், சந்தழிகுறளுந் தாழிசைக்குறளே,, உரைத்தனவிரண்டுங், குறட்பாவினமே,, என்பன யாப்பருங்கலம்.

மூன்றடியானும்முடிந்தடிதோறுமுடிவிடத்துத்
தான்றனிச்சொற்பெறுந்தண்டாவிருத்தம்வெண்டாழிசையே
மூன்றடியாய்வெள்ளைபோன்றிறுமூன்றிழிபேழுயர்வாய்
ஆன்றடிதாஞ்சிலவந்தங்குறைந்திறும்வெண்டுறையே.

இ-கை. வெள்ளிவிருத்தமும், வெண்டாழிசையும், வெண்டுறையுமாமாறுணர்த்து-ற்று. மூன்றடியானு முடிந்தடிதோறு முடிவிடத்துத் தான்றனிச்சொற்பெறுந் தண்டாவிருத்தம்-எ-து. மூன்றடியானுமூற்றுப்பெற்று அடிதோறும், ஒருசொல்லே யிறுதிக் கட்டனிச்சொல்லாய்வருவது வெளிவிருத்தமெனப்படும்-எ-று, மூன்றடியானுமென்ற வும்மையால் நான்கடியானும் வரப்பெறுமெனக்கொள்க, தண்டாவிருத்தமென்று சிறப்பித்தவதனால் நாற்சீரடி யுட்பட்டடங்காது வேறாய்வருவது ஈண்டுத்தனிச்சொல்லெனக்கொள்க. என்னை "ஒரு மூன்றொரு நான்கடியடிதோறுந், தனிச்சொற்றழுவி நடப்பதுவெள்ளை, விருத்தமெனப்பெயர்வேண்டப்படுமே, என்றார் காக்கைபாடினியார்-வ-று." கொண்டல் முழங்கினவாற் கோபம் பரந்தனவாலென்செய்கோயான் வண்டுவரிபாடவார்தளவம் பூத்தனவா லென்செய்கோயான், எண்டிசையுந் தோகையிருந்த கவியேங்கினவா லென்செய்கோயான்,, இது மூன்றடியான் என்செய்கோ யானென்னுந் தனிச்சொற்பெற்று வந்த வெளிவிருத்தம். "ஆவாவென்றே யஞ்சின ராழ்ந்தாரொருசாரார், கூகூவென்றே கூவிளிகொண்டாரொருசாரார், மாமாவென்றே மாய்ந்தனர் நீந்தாரொருசாரார், ஏகிர்நாகிமொன்செய்து மென்றாரொருசாரார்,, இது நான்கடியாய் ஒரு சாராரென்னுந் தனிச்சொற்பெற்றுவந்த வெளிவிருத்தம், வெண்டாழிசையே மூன்றடியாய் வெள்ளைபோன்றிறும்-எ-து

மூன்றடியாயிற்றடிவெண்பாவேபோல முச்சீரடியானிறுவது வெண்டாழிசையென்றும், வெள்ளொத்தாழிசையென்றும், வழங்கப்படும்-எ-று, என்னை "அடியொருமூன்றுவந் தந்தடிசிந்தாய், விடினது வெள்ளொத்தாழிசையாகும், என்பதியாப்பருங்கலம்,வ-று, "நண்பிதென்று தீயசொல்லார் முன்புநின்று முனிவுசெய்யார், அன்பு வேண்டுபவர், இது மூன்றடியாசிரியத்தளையான் வந்தவெண்டாழிசை, மூன்றிழிபே ழுயர் வாயானறடிதாஞ் சிலவந்தங்குறைந்திறும்வெண்டுறையே-எ-று, மூன்றடிச்சிறுமையாய் ஏழடிப்பெருமையாய் இடையிடை நான்கடியானும், ஐந்தடியானும்,ஆறடியானும்வந்து பின்பிற் சிலவடிசிலசீர்குறைந்துவருவன வெண்டுறையெனப்படும்-எ-று, ஆன்றடிதாமென்றுசிறப்பித்தவதனால், முன்பிற்சிலவடியோ ரோசையாயும், பின்பிற் சிலவடி மற்றோரோசையாயும, வருவனவொரு சார்வேற்றொலி வெண்டுறையெனக்கொள்க. என்னை "மூன்றடிமுதலா வேழடிகாறும்வந் தீற்றடி சிலசில சீர்தபநிற்பினும், வேற்றொலிவிரவினும் வெண்டுறையாகும் என்பதியாப்பருங்கலம், வ-று, "குழலிசையவண்டினங்கள் கோழிலை, செங்காந்தட்குலேமேற்பாய, அழலெரியின் மூழ்கினவாலந்தோ வளிய வென்றயல்வாழ்மந்தி, கலுழ்வனபோனெஞ்சயர்ந்த கல்லருவிதூஉட், நிழல்வரை நன்னாடனீப்பனோவல்லன்,, இது நான்கடியாய் ஈற்றடியிரண்டும், இரண்டுசீர் குறைந்துவந்த ஓரொலிவெண்டுறை, "தாளாளரல்லாதார் தாம்பலராயக்காலென்னாமென்னும், யாளியைக்கண்டஞ்சியானைதன்கோடிரண்டும், பீலிபோற்சாய்ந்து விழும்பிசிற்றியாங்கே,, இது மூன்றடியாய் ஈற்றடியிரண்டும் இரண்டுசீர் குறைந்துவந்தஓரொலிவெண்டுறை "முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலகும்மேவல்செய முறைசெய்சோமான், வழங்குதிறல வாண்மாறன் மாச்செழியன்றுக் கரியவைவேல்பாடிக், கலங்கிநின்றொலாங் கருதலாகாவணாம், இலங்குவாளிரண்டினு விருசைவீசிப்பெயர்ந், தலங்கன்மம் லேயவிழ்ந்தாடவாடுமிவள், கொலங்கொள் பூந்தடங்கட்கேபுரிந்துநின்றொலாம்,விலங்கியுள்ளந் தபவிளிந்துவேறுபவே,, இது ஏழடியாய் முதலிரண்டடியும் அறுசீராய் ஓரோசையாய்ப், பின்பிலேந்தடியும் நாற்சீராய் வேறோரோசையாய்வந்த வேற்றொலிவெண்டுறை, ஐந்தடியானுஆறடியானும் வருவன யாப்பருங்கல விருத்தியுட்கண்டுகொள்க. மூன்றடியாய்வெள்ளையோன்றிறுந்தாழிசை மூன்றிழிபேழ் ஆன்றடிதாஞ் சிலவந்தத்தடிகளவைகுறைந்து, தோன்றுந்துறை வெள்ளைதண்டாவிருத்தந் தனிச்சொல்வந்து, மூன்றடியானு மூடியுமுடியுமொர்நான்கினும்மே,, என்று வெண்பாவிற்கினமாகிய தாழிசை துறைவிருத்தங்கட்கு முறையானே இலக்கணஞ்சொல்லாது தலைதடுமாற்றமாகக் காரிகைசொல்லவேண்

மூய தென்னையோவெனின், ஒருசார்வெண்டுறையின் ஈற்றடியொன்றொருசீர் குறைந்துவருவன வுளதென்பதூஉம், வெள்ளொத்தாழிசையின் முதலிரண்டடியு நான்குசீரான் வருமென்பதூஉம், சிந்தியல்வெண்பா வொருபொருண்மேன் மூன்றடுக்கி வருவனவெல்லாம் வெள்ளொத்தாழிசையென்று வழங்கப்படுமென்பதூஉம், அறிவித்தற்குவேண்டப்பட்டது. தலைதடுமாற்றந்தந்து புணர்ந்துரைத்தலென்பது தந்திரவுத்தியாகலான்-வ-று. "வெறியுறுகமழ்கண்ணி வேந்தர்கட்காயினும், உறவுறவரும்வழி யுரைப்பனவுரைப்பன்மற், செறிவுறுதகையினர் சிறந்தனரிவர்நமக், கறிவுறுதொழிலொன் றலலவைசொல்லன்மின், பிறபிறநிகழ்வனபின்,, இது ஈற்றடியொன்றொருசீர்குறைந்துவந்த ஓரொலிவெண்டுறை. வெள்ளொத்தாழிசை முதலிரண்டடியும் நாற்சீராய் வருவது கண்டிதென்னு மிலக்கியத்துட்கண்டுகொள்க, "அன்னாயறங்கொனலங்கிளர்சேட்சென்னி, ஒன்னாருடைபுறம்போலநலங்கவர்ந்து, துன்னான்றுறந்துவிடல்-ஏடியறங்கொனலங்கிளர்சேட்சென்னி, கூடாருடைபுறம்போல நலங்கவர்ந்து, நீடான்றுறந்து விடல்—மாவாயறங்கொன லங்கிளர்சேட்சென்னி, மேவாருடைபுறம்போலநலங்கவர்ந்து காவான்றுறந்துவிடல்,, இவை சிந்தியலவெண்பா, ஒருபொருண்மேன் மூன்றடுக்கி வந்தமையான் வெள்ளொத்தாழிசை, என்னை "ஈரடி முக்காலிசைகொள்நடந்து, மூன்றுடனடுக்கித்தோன்றி னொத்தாழிசை, என்றார்மயேச்சுரர். (௯)

கொண்டன்முழங்கினவாவாவிருத்தங்குழலிசைய
வண்டினம்வெண்டுறைதாளாமுழங்கொடுதாழிசையே
கண்டிதென்றார்கலிகொன்றைவெண்செந்துறைநீலகண்ணும்
பிண்டியறுவர்வண்டார்வெறிதாழிசைபெய்வளையே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே வெண்பாவினகாட்டியஇலக்கியங்களை முதனினைத்துக்கொள்க.

கடையயற்பாதமுச்சீர்வரினேரிசைகாமருசீர்
இடைபலகுன்றினிணைக்குறளெல்லாவடியுமொத்து
நடைபெறுமாயினிலைமண்டிலநடுவாதியந்தத்
தடைதருபாதத்தகவலடிமறிமண்டிலமே,

அகவலோசையோடளவடித்தாகியும், இயற்சீரயின்றும், அயற்சீர் விரவியும், தன்றளைதழுவியும், பிறதளைமயங்கியும், நிரைநடுவாகியவஞ்சியுரிச்சீர் வருதலில்லா ஆசிரியப்பாவினை, அடியானுந், தொடையா

னும் ஓசையானும், பொருளானும், பெயர்வேறுபாடுணர்த்துவானெ டுத்துக்கொண்டார் அவற்றுள், இக்காரிகை, நேரிசையாசிரியப்பாவும், இணைக்குறளாசிரியப்பாவும், நிலைமண்டிலவாசிரியப்பாவும், அடிமறிம ண்டிலவாசிரியப்பாவுமாமாறுணர்த்து-ற்று. கடையயற்பாத முச்சீர்வ ரினேரிசை-எ-து, ஈற்றயலடி முச்சீரான்வருவது நேரிசையாசிரியப் பா-எ-று. என்னை "அந்தவடியினயலடிசிந்தடி, வந்தன நேரிசையாசிரி யம்மே, என்மனார்யாப்பருங்கலம்,, வ-று. "நிலத்தினும் பெரிதேவானி னுமுயர்ந்தன்று நீரினுமாரளவின்றேசாரற், கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு, பெருந்தேனிழைக்கு நாடனொடுநட்பே,, இஃதீற்றயலடிமு ச்சீரான் வந்தமையானேரிசையாசிரியப்பா. காமுறுசீ ரிடைபலகுன்றி னிணைக்குறள்-எ-து ஈற்றடியும், முதலடியும, ஒழிந்து இடையடிகள் இரண்டும்பலவும், குறளடியானும, சிந்தடியானும, வருவன இணைக் குறளாசிரியப்பா-எ-று, எனனை "அளவடியந்தமுமாதியுமாகிக, குறள டிசிந்தடியென்றிரண்டுமிடைவர நிற்பதிணைக்குறளாகும்,, என்றார் காக்கைபாடினியார்-வ-று "நீரின்றண்மையுந் தீயின்வெம்மையும், சார ச்சார்ந்து, தீரத்தீருஞ், சாரனாடன்கேண்மை, சாரச்சாரச்சார்ந்து, தீர த்தீரத்தீரபொல்லாதே,, இது முதலடியும் ஈற்றடியுநாற்சீராய் இடை யடி யிருசீரானும், முச்சீரானும்வந்த இணைக்குறளாசிரியப்பா. "சிறிய கட்பெறினே யெமக்கீயுமன்னே பெரியகட்பெறினே,யாம்பாடத்தான் மகிழ்ந்துண்ணுமன்னே, சிறுசோற்றானும், நனிபலகலத்தன்மன்னே, பெருஞ்சோற்றானும், நனிபலகலத்தன்மனனே, என்பொடு தடிபடுவ ழியெல்லாம், எமக்கீயுமன்னே, அம்பொடு வேனுழைவழியெல்லாம், தானிற்குமன்னே, நரந்தநாறுந்தன்கையால், புலவுநாறுமென்றலை தை வருமன்னே, அருங்கலையிரும்பா ணரகன்மண்டைத் துளையுரீஇ,இரப் போர்கையுளும்போகிப், புரப்போர்புன்கண்பார்வைசோர, அஞ்சொ னுண்டேர்ச்சிப் புலவர்நாவிற், சென்றுவீழ்ந்தன்றவன், திருந்ிறத்திய ங்கியவேலே, ஆசாற்கெந்தை யாண்டுளன்கொல்லோ, இனிப்பாடு நருமில்லை, பாடுநருக்கொன்றீகுநருமில்லை, பனித்துறைப் பகன்றை நறைகொண்மாமலர், சூடாதுவைகி யாங்குப்பிறர்க்கொன்,றீயாதுவீயு முயிர்தவப்பலவே,, இஃதிடையிடையே யிருசீரடியு முச்சீரடியுமாய் வந்தமையால் இணைக்குறளாசிரியப்பா, காமருசீரென்று சிறப்பித்தவ தனால் ஆசிரியப்பா நான்கிற்கும் ஏயென்னுமசைச்சொல்லானிறுவது சிறப்புடைத்து, பிறவெழுத்து மீறுய்வரப் பெறுமாயினு மெனக்கொ ள்க. என்னை "அகவலிசையன வகவன்மற்றவை, ஏ ஓ ஈ ஆ வென்னை யென்றிறுமே என்றார் தொல்காப்பியனார், எல்லாவடியுமொத்துநடை பெறுமாயி னிலைமண்டிலம்-எ-து,எல்லாவடியுந்தம்முள்ளொத்து நா

ற்சீரடியாய்வருவது நிலைமண்டிலவாசிரியப்பா-எ-று. வ-று. "வேரல்வே
லி வேர்க்கோட்பலவின், சாரனாடசெவ்வியையாகுமதி, யாரஃதறிந்திசி
னோரே சாரற், சிறுகோட்டுப்பெரும்பழந்தூங்கியாங்கிவள், உயிர்தவச்சி
றிது காமமோபெரிதே,, இஃதெல்லாவடியும் நாற்சீராயளவொத்துவந்
தமையால் நிலைமண்டிலஆசிரியப்பா, மண்டிலமெனினும், நிலைமண்டில
மெனினுமொக்கும், நிலைமண்டில ஆசிரியப்பாவிற்கு என்னென்னு
மசைச்சொல்லானிறுவது சிறப்புடைத்து மற்றைநசாரொற்றினானும்
உயிரினானும், ஈராய்வரவும் பெறுமெனக்கொள்க, என்னை "ஒத்தவடி
த்தா யுளையாமரபொடு, நிற்பதுதானே நிலைமண்டிலமே, என்னென்கி
ளவியை யீற்றப்பெறுதலு, மன்னபிறவு மந்தநிலைபெற, நிற்கவும்பெ
றூஉ நிலைமண்டிலமே,, என்றாராகலின், நடுவாதியந்தத் தடைதருபாத
த்தகவ லடிமறிமண்டிலமே-எ-து. எல்லாவடியு முதனடுவிறுதியாகவு
ச்சரிப்பினு மோசையும்பொருளும் பிழையாது வருவதடிமறிமண்டில
ஆசிரியப்பா-எ-று, என்னை "மனப்படுமடிமுதலாயிறின்மண்டிலம்என்
பதியாப்பருங்கலம், "உரைப்போர்குறிப்பினுணர்வகையன்றி, யிடைப்
பான் முதலீறென்றிவைதம்முண், மதிக்கப்படாதனமண்டிலயாப்பே,,
என்றார்க்கையாடினியார், வ-று, "சூரல்பம்பியசிறுகான்யாறே, சூரமக
ளிராணங்கினரோ, வாரலெனினேயானஞ்சுவலே, சாரனாடநீவரலாறே,,
இஃதெல்லாவடியுமுதனடுவிறுதியாகவுச்சரிக்க, ஓசையும்பொருளும் பி
ழையாதுவந்த அடிமறிமண்டில ஆசிரியப்பா.

நேரிசையாகுமிலத்திறுமென்பதிணைக்குறட்பா
நீரின்சிறியநிலைமையதாநிலைமண்டிலப்பா
வேரலென்றுகும்விரைமலர்க்கோதைவில்லேர்நுதலாய்
சூரல்பம்பென்பதடிமறியாகத்துணிந்தனரே.

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின்வழியே ஆசிரியப்பா நான்கிற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (அ)

தருக்கியதாழிசைமூன்றடியொப்பனநான்கடியாய்
எருத்தடிநைந்துமிடைமடக்காயுமிடையிடையே
சுருக்கடியாயுந்துறையாங்குறைவின்றெல்சீரகவல்
விருத்தங்கழிநெடினான்கொத்திறுவதுமெல்லியலே.

இ-கை. ஆசிரியத்தாழிசையும், ஆசிரியத்துறையும், ஆசிரியவிருத்த
முமா மாறுணர்த்து-ற்று. தருக்கியதாழிசை மூன்றடியொப்பன-எ-து.
மூன்றடியாய்த் தம்முள்ள வொத்துவருவன ஆசிரியத்தாழிசை-எ-று-

தருக்கியலென்று சிறப்பித்தலதனால், அவை ஒரு பொருண்மேன் மூ
ன்றடுக்கிவருவன சிறப்புடையன, தனியே வரப்பெறுமாயினுமெனக்
கொள்க. என்னை "மூன்றடியொத்த முடிவினவாய்விடி, னொன்றவகவற்
றாழிசையாகும்,, என்பதியாப்பருங்கலம். வ-று. "கன்றுகுணிலாக் க
னிபுகுத்தமாயவன், இன்றுநம்மானுள் வருமேலவன்வாயிற், கொன்
றையந்தீங்குழல் கேளாமோதோழீ. பாம்புகயிறுக்கடல கடைந்தமா
யவன், ஈன்குநம்மானுள் வருமேலவன்வாயில், ஆம்பலந்தீங்குழல் கே
ளாமோதோழீ கொல்லையஞ்சாரற் குருந்தொசித்தமாயவன், எல்லிந
ம்மானுள் வருமேலவன்வாயில, முல்லையந் தீங்குழல் கேளாமோதோ
ழீ,, இவையொருபொருண்மேன் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை
"வானுறநிமிர்ந்தனை வையகமளந்தனை, பான்மதிவிடுத்தனை பல்லுயி
ரோம்பினை, நீனிறவண்ண நின்னிணைகழ றொழுதனம்,, இது தனியேவ
ந்த ஆசிரியத்தாழிசை. நான்கடியா யெருத்தடிநைந்து மிடைமடக்கா
யு மிடையிடையே சுருக்கடியாயுந் துறையாம்-எ-து. "நான்கடியாய் ஈ
ற்றியலடி குறைந்து வருவனவும் நான்கடியாயிற்றிய லடிகுறைந்திடை
மடக்காய்வருவனவும், நான்கடியா யிடையிடைகுறைந்து வருவனவு
ம், நான்கடியாயிடை யிடைகுறைந் திடைமடக்காய் வருவனவும், ஆசிரி
யத்துறை. எ-று. நான்கடியாயென்பதனை யெல்லாவற்றினோடுங் கூட்
டியிடைமடக்காயென்பதனை யொருகாலிருதலையுங் கூட்டி மத்திமதீப
மாகப் பொருளுரைத்துக்கொள்க. சீர்வரையறுத்திலாமையால் எனைத்
துச்சீரானும், அடியாய்வரப்பெறுமெனக்கொள்க. வ-று. "கரைப்பொ
ருசான்யாற்றங் கல்லதரெம்முள்ளி வருவிராயின், அரையிருள்யாமத்த
டுபுலியே றஞ்சியகன்றுபோக, நரையுருமேறு நுங்கைவேலஞ்சு நும்
மை, வரையரமங்கையர் வௌவுதலஞ்சுதும் வாரலையோ,, இது நான்
கடியாய் ஈற்றயலடி குறைந்துவந்த ஆசிரியத்துறை. "வண்டுளர்பூந்தா
ர் வளங்கெழுசெம்பூட் சேய்வடிவேபோலத், தண்டளிர்ப்பூம்பிண்டித்
தழையேந்திமாவின வித்தணந்தோன்யாரோ, தண்டளிர்ப்பூம்பிண்டித்
தழையேந்திவந்துநம்,பண்டைப்பதிவி னவிப்பாங்குபடமொழிந்துபட
ர்ந்தோனன்றே,, இது நான்கடியாய் ஈற்றயலடிகுறைந் திடைமடக்கா
ய்வந்த ஆசிரியத்துறை "கொன்றூர்ந்தமைந்த குருமுகத்தெழினிறக்கு
நுதிக்கோட்டன விருந்தாட்பெருங்கைக் குன்றுமென வன்றுமெனக்
குமுறுகின்றன கொடுந்தொழில்வேழம், வென்றூர்ந்தமைந்த விளங்
கொளி யிளம்பிறைத்துளங்கு வாளிலங்கெயிற் றழலுளைப்பருஉத்தா
ளிதிரும் வாளனவெதிருங் கூற்றெனச் சுழலாநின்றன சுழிக்கண்யா
ளி,சென்றூர்ந்தமைந்தசிறுநுதிவள்ளுகிர்ப்பொறியெருத் தெறுழ்வலிப்

லவுகாறழல்வாய்ப் புணலாமெனக் கனலாமெனப் புகையா ரின்றனிமாளேற்றை, என்றுங்கிளைவயிளைவை யியங்கலினெனந்திறத் தினிவரல் வண்டலங் தனிவரலெனத்தலை விலக்கலி னிறுவனா மிசையெறிகும்பிடை யிதுவென்னெனவது கோனர்காவிர விடைகளவுளமது கற்ருரோதுங் கற்பன்றே,, இதுநான்கடியாய் முதலடியு மூன்ருமடியும் திறன்கு சீராயல்லாத வடியிரண்டும் பதினறுசீராயிடை யிடைகுறைந்துவந்த ஆசிரியத்துறை. "இரங்குயின்முழவா வின்னிசையாழ்தே ந, அரங்கமணிபொழிலா வாடும்போலு மிளவேனில், அரங்கமணி பாழிலா வாடுமாயின், மரங்கொன்மணந்தகன்ருர் நெஞ்சமென்செய் திளவேனில்,, இது நான்கடியா யிடையிடை குறைந்திடை மடக்கா வந்த ஆசிரியத்துறை. என்னை "கடையதனயலடி கடைதபுநடையவு, வெடிமடக்காய் நான்கடியாகி,யிடையிடைகுறைனவுமகவற்றுறையே ன்பதியாப்பருங்கலம். குறைவ்ருசீ ரகவல் விருத்தங்கழிநெடி ஞ சொத்திறுவது-எ-து, கழிநெடிலடிநான்காய்த் தம்முளளவொத்துவ வன ஆசிரிவிருத்தம் எ-று. குறைவிருல்சீரொன்றுசிறப்பித்தவதனு -எண்சீரின்மிக்கசீரான்வந்த அடியெய்லாஞ் சிறப்பிலவெனக்கொள் . வ-று. "விடஞ்சூழாவினிடைறுடங்க மின்வாள்விசி விளையார்வேங் டஞ்சூழ்நாடன் காளிங்கன் கதிர்வேல்பாடுமாதங்கி, வடஞ்சேர்கொ கை மலைதாந்தாம் வடிக்கண்ணீ லமலர்தாந்தாங், தடந்தோளிரண்டும் வய்தாந்தாமென்னுந் தன்கைத் தண்ணுமையே, இஃ தறுசீர்க்கழிநெ லடி யான்வந்த ஆசிரியவிருத்தம். கணிகொண்ட-எ-து, எழுசீர்க்கழி நெடிலடி யான்வந்த ஆசிரியவிருத்தம். மூவடிவினல்-எ-து. எண்சீர்க் ழிநெடிலடி யான்வந்த ஆசிரியவிருத்தம். இடங்கைவெஞ்சிலை-எ-து ன்பதின்சீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். கொங்குதங்கு -து, பதின்சீர்க்கழிநெடிலடி யான்வந்த ஆசிரியவிருத்தம். என்னை கழிநெடிலடி நான் கொத்திறின் விருத்தமஃ, தழியாமரபின தகவுலா தம், என்பதியாப்பருங்கலம். மெல்லியலே-எ-து. மகடூஉமுன்னிலை

கன்றுகுணில்வானுறத்தாழிசையாங்களைபொருகான்
என்றதும்வண்டுளர்பூந்தாரிரங்குகுயின்முழவாக்
கொன்ருர்ந்தமைந்தவகவற்றுறைகுறையாவிருத்தம்
பின்ருழ்குழலிவிடங்கணிமூவடிவாதியவே.

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின்வழியே ஆசிரியப்பா வினங்கட்கு காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (௯)

தரவொன்றுதாழிசைமூன்றுதனிச்சொற்சுரிதகமாய்
நிரலொன்றினேரிசையொத்தாழிசைக்கலிநீர்த்திரைபோல்
மரபொன்றுநேரடிமுச்சீர்குறளடிவேயடுப்ப
தரவொன்றுமல்குலதம்போதரங்கவொத்தாழிசையே.

துள்ளலோசைத்தாய், நேரீற்றியற்சீரும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வாராது, நிரைமுதலாகிய வெண்பா வுரிச்சீர்மிக்கு நேரடித்தாய்க் கலித்தளையும், அயற்றளையுந்தட்டுத் தரவுதாழிசையென்னு முதலுறுப்பும், அராகம், அம்போதரங்கம், தனிச்சொல் சுரிதகமென்னுந் துணையுறுப்பு முடைத்தாய், ஒத்தாழிசைக்கலி, வெண்கலி, கொச்சகக்கலியென்னும் வேறுபாட்டாற்கிடந்த, கலிப்பாக்களை உறுப்பினானும், ஓசையானும், பொருளானும், பெயர்வேறுபாடுணர்த்துவா னெடுத்துக்கொண்டார், அவற்றுள், இக்காரிகை, நேரிசையொத்தாழிசைக்கலிப்பாவும், அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பாவுமாமாறுணர்த்து-ற்று. தரவொன்று தாழிசைமூன்று தனிச்சொற்சுரிதகமாய்நிரலொன்றினேரிசை யொத்தாழிசைக்கலி-எ-து, முன்னொருதரவுவந்து, அதன்பின்பு மூன்றுதாழிசைவந்து, அதன்பின் னொருதனிச்சொல்வந்து, அதன்பின்னாசிரியத் தானாவது, வெண்பாவானாவது, ஒருசுரிதக வுறுப்புப்பெற்றுவருவது நேரிசையொத்தாழிசைக்கலிப்பா-எ-று. தரவெனினும், எருத்தமெனினுமொக்கும். தாழிசை யெனினும், இடைநிலைப்பாட்டெனினுமொக்கும். தனிச்சொலெனினும், விட்டிசையெனினும், கூனெனினும், தனிநிலையெனினுமொக்கும் சுரிதகமெனினும், மடக்கியலெனினும், வாரமெனினும், வைப்பெனினும் போக்கியலெனினுமொக்கும். என்னை, "தந்து முன்னிற்றலிற் றரவேதாழிசை, யொத்தாழ்ந்திறினஃ தொத்தாழிசையே, தனிதானிற்றலிற் றனிச்சொற்குனித்திரை, நீர்ச்சுழிபோலநின்று சுரிந்திறுதலிற், சோர்ச்சியில்புலவர் சுரிதகமென்ப,, என்று காரணக்குறிசொன்னாரு முளரெனக்கொள்க. இனித்தரவுதாழிசைகட் கடிவரையறையாமாறு சுருங்கிற்று மூன்றடியென்னுங் காரிகையுட்போக்கிச் சொல்லுதும்-வ-று. "வாணெடுங்கண்பனிகூரவண்ணம் வேறாய்த்திரிந்து, தோணெடுந்தகைதுறந்து துன்பங்கூர்பசப்பினவாய்ப், பூணொடுங்குமுலை கண்டும்பொருட்பிரிதல் வலிப்பவோ, இதுதரவு-சூருடையகடுங்கடங்கள் சொலற்கரியவென்பவாற், பீருடையநலந்தொலையப் பிரிவாரோபெரியவரோ.—சேணுடைய கடுங்கட்ங்கள் செலற்கரியவென்பவால், நாணுடையநலந்தொலைய நடப்பாரோ நலமிலரோ — சிலம்படைந்தவெங்கானஞ் சிறியவேயென்பவாற், புலம்புடைந்த நலந்தொலையப்போவாரோ பொருளிலரோ, இவை மூன்றுந்தா

ழிசை, எனவாங்கு, தனிச்சொல், அருளொடுபிலராய்ப் பொருள்வயி
ற்பிரிவோர், பன்னெடுங்காலமும்வாழியர், பொலனெறுந்தேரொடுந்
தானையிற்பொலிந்தே,, இதுசுரிதகம். தரவுமூன்றடியாய்த் தாழிசைமூ
ன்றுமிரண்டிரண்டடியாய்த்தனிச்சொற்பெற்று மூன்றடியாசிரியச்சுரி
தகத்தாலிற்ற நேரிசையொத்தாழிசைக்கலிப்பா, வெள்ளைச்சுரிதகத்தா
லிற்றனயாப்பருங்கல விருத்தியுட்கண்டுகொள்க என்னை "தரவுதாழி
சை தனிச்சொற்சுரிதக மெனுநான்குறுப்பின தொத்தாழிசைக்கலி,,
என்றாராகலின். "தரவொன்றாகித் தாழிசைமூன்றாய்த், தனிச்சொலி
டைகிடந்து சுரிதகந்தழுவ, வைத்தமரபின தொத்தாழிசைக்கலி,, என்
றார் மயேச்சுரர்நீர்த்திரைபோன், மாபொன்றுநோடி. முச்சீர்குறணடி
வேமடுப்பத்து அம்போதரங்கவொத்தாழிசை-எ-து. கலாசாரக் கலா
சார வொருகாலைக்கொருகாற் சுருங்கிவருகின்ற நீர்த்தரங்கம்போல
நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியுமாகிய அசையடிகளைத் தாழி
சைக்குந் தனிச்சொற்கு நடுவேதொடுத்துத் தரவுதாழிசை அம்போத
ரங்கம் தனிச்சொல் சுரிதகமென்னும் ஐந்துறுப்புடைத்தாய்வருவது
அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பா -எ-று. அரவொன்றுமல்குல்-
எ-து. மகடூஉமுன்னிலை, மாபொன்றுநோடியென்று சிறப்பித்தவத
னால், அசையடிதான் ஈரடியாயிரண்டும், ஓரடியாய்நான்கும், முச்சீரா
லெட்டும், இருசீராற்பதினாறுமாய்வருவது சிறப்புடைத்து எட்டும்ப
தினாறுமென்று சொல்லப்பட்டன, நான்குமெட்டுமாகச்சுருங்கி வரப்
பெறுமாயினுமெனக்கொள்க. என்னை, "ஈரடியிரண்டு மோரடிநான்கு
முச்சீரெட்டு மிருசீரிரட்டியு, மச்சீர்குறையினு மம்போதரங்கம்,,என்
றாராகலின், அம்போதரங்கமெனினும், அசையடியெனினும், பிரிந்தி
சைக்குறளெனினும், சொற்சீரடியெனினும், எண்ணெனினுமொக்கும்.
என்னை, "அனையவாகியவசையடிநான்குந், தனியொடுதாழிசை யிடை
வருமென்ப,, அவற்றைப்பேரெண், அளவெண், இடையெண், சிற்றெ
ண்ணென்றுபெயரிட்டு வழங்குவாருமுளர்-வ-று, "கெடலருமாமுனி
வர் கிளர்ந்துடன்றொழுதேத்தக், கடல்செழுகனைசுடரிற் கலந்தொளி
ரும் வாலுளைய, அழலவிர்சுழல்செங்க ணரிமாவாய்மலைந்தானைத், தா
ரொடுமுடிபிதிரத் தமனியப்பொடிபொங்க, வார்புனலிழிகுருதி யகலி
டமுடனனைப்பக், கூருகிரான்மார்பிடந்த கொலைமலிதடக்கையோய்-
இது தரவு, முரசதிர்வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப், புனை
தொடித்திரடிண்டோட்போர்மலைந்த மறமல்லர், அடியொடு முடியிறு
ப்புண் டயர்ந்தவர்நிலஞ்சேரப், பொடியெழுசெலங்களத்துப்புடைத்தது
மின்புகழோ, கலியொலிவியனுலகம் கலந்துடனொடுங்க, வலியிய

லவிராழி மாவெதிர்ந்தமருட்சோர்வு, யானைகாருடம்போடு மறம்பிற ரவெதிர்கலங்கிச், சேணுயரி நிவிசும்பிற் செகுத்ததுவின்னிலமாமோ படுமணியின் கிளைகள் பரந்துடனிரிந்தோடக், கடுமுரணெதிர்மலைந்தகா ளொலியெழிலேறு, வேரிநறுமெருப்பொசியவீழ்ந்ததுநெடுமோருக வெழு மலிபெருந்தொழுவி னிறுத்ததுவின்னிகலாமோ, இவைமூன்றுந்தாழி சை—இலங்கொளிமரசத மெழின்மிகுவியன்கடல், வலம்புரித்தடக்கை யின் மாஅனின்னிறம், விரிபிணாக்கோங்கரும் வெங்கதிர்பசும்பொ னும், பொருகளிறட்டோய் புனையுமின்னுடை, இவைநாற்சீரடியிரண் டம்போதரங்கம், இவையேபோல, "நண்கவாக்குபு முடிகனலுருஞ்செங் ணியைத் தண்சுடருறுபகை தவிர்த்தவாழியை, ஒளியியலுலவணமோங்கி யகொடியினை, வளிமிகுசகட மாறியவடியினை, இவையோரடிநான் கம் போதரங்கம, இவை அளவெண் போரவுணர்க்கடந்தோய்நீஇ, புனா மருதம்பிளந்தோய்நீஇ, நீரகலமளந்தோய நீஇ, நிழலிகழும்படையோ ய்நீஇ, இவை முச்சீரடிநான்கம்போதரங்கம இவையிடையெண், ஊழி நீஇ உலகுநீஇ உருவுநீஇ, அருவுநீஇ, ஆழிநீஇ, அருளுநீஇ, அறமுநீஇ மறமுநீஇ, இவையிருசீரோரடி எட்டம்போதரங்கம், இவைசிற்றெண எனவாங்கு, தனிச்சொல், அடுதிறலொருவநிற் பரவுதுமெங்கோ தொடுகழற்கொ, டுமேழுட்பகட்டெழினமாயிற், கயலொடுகலந்த சில புடைக்கொடுவரிப்புலியுறழ்தடக்கைப் போர்வேலசகுன, தொன்று முதிர்கடலுலகமுழுதுடன், ஒன்றுபுரிதிகிரி யுருட்டுவோனெனவே,, இதுசுரிதகம், இஃதெட்டுமெபதினறுமெனறு சொல்லப்பட்ட முச்சீர டியும், இருசீரடியும, நான்குமெட்டுமாயவந்த அம்போதரங்க ஒத்தா ழிசைக்கலிப்பா. "நலங்கிளர்திருமணிபு னன்பொன்னுய் துயின்மழைகார், இலங்கெயிற்றழலரி மானொருதகுசோரணபிணமேல, இருபுடையுமி யக்கரச ரிணைக்கவரியெடுத்தசைப்ப, விரிதாமங் துயலவரும் வெண குடை மூன்றுடனிழறற, வண்டாரற நாற்காதம வகைமாணவுயர்ந் தோங்கும், தண்டளிர்ப்பூம்பிண்டிக் கீழ்தக்க பெறவிறலிருந்தனையே என்னும் அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாவினுளெட்டும் பதி னறுமென்று சொல்லப்பட்ட அம்போதரங்கங் குறையாதேவந்தவா று-யாப்பருங்கலவிருத்தியுட்கண்டுகொள்க. என்னை. "நீர்த்திரைபோல நிரலேமுறைமுறை, யாசகஞ்சுருங்கி யசையடிதாழிசை, விட்டிசைவி ரியத் தொடுத்துச்சுரிதகந் தாக்கித்தொடுத்த தரவினேடெனவும்,யாப் புற்றமைந்த வம்போதரங்கம்,, எனறார் காக்கைபாடினியார்.

வாணெடுங்கண்பனிசோரிசையாகுமதர்த்திருண்டு
சேணுறவோடிக்குழையிடறிசெருச்செய்யும்விழி

நாணுந்திருவுமறிவுஞ்செறிவுமுடையனல்லாய்
ஏனுட்கெடலருமாமுனியப்போதரங்கமென்னே.

இவ்வுரைச்சூத்திரக்காரிகையின்வழியே நேரிசையொத்தாழிசைக்கலிப்பாவிற்கும், அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாவிற்குங்காட்டிய இலக்கியங்களை முதனினைந்துக்கொள்க. (௰)

அசையடிமுன்னரராகம்வந்தெல்லாவுறுப்புமுண்டேல்
வசையறுவண்ணகவொத்தாழிசைக்கலிவாணுதலோதட்
டிசைதனதாகியும்வெண்பாவியைந்துமின்பான்மொழியாய்
விசையறுசிந்தடியாலிறுமாய்விடின்வெண்கலியே.

இ-கை. வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவும், வெண்கலிப்பாவுமாமாறுணர்த்து-ற்று, அசையடிமுன்னரராகம்வந் தெல்லாவுறுப்புமுண்டேல் வசையறுவண்ணகவொத்தாழிசைக்கலி-எ-து, அம்போதரங்கவுறுப்பிற்குந்தாழிசைக்குநடுவே அராகவுறுப்புப்பெற்றுத்தரவு,தாழிசை அராகம்,அம்போதரங்கம்,தனிச்சொல்,சுரிதகமென்னு மாறுறுப்பினையுமுடைத்தாய் வருமெனினது வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவெனப்படும்-எ-று, அராகமெனினும், வண்ணகமெனினும், முடுகியலெனினும், அடுக்கியலெனினுமொக்கும், வசையறுவண்ணகமென்று சிறப்பித்தவதனால், அராகவுறுப்புத்தானளவடி முதலாகிய எல்லாவடியானும், வரப்பெறுமெனக்கொள்க. அடிவரையறையாவது சிறுமைநான்கடி பெருமையெட்டடி இடை ஐந்தடியானும், ஆறடியானும், ஏழடியானும், வரப்பெறுமெனக்கொள்க. என்னை "அளவடிமுதலா வனைத்தினுநான்கடி, முதலாவிரட்டியு முடுகியணடக்கும்,, என்றாராகலின்' வ-று. விளங்குமணிப் பசும்பொன்னின் விசித்தமைத்துக் கதிர்கான்று துளங்குமணிக்கனை கழற்காற்று மலர்நறும்பைந்தார்ப், பருஉத்தடக் கை மதயானைப் பணையெருத்தின்மிசைத்தோன்றும், குருஉக்கொண் டயணிப்புரோதாய் குறைவிரந்து முன்னாட்கண், மாயாதவனப்பினையாய் மகிழ்வார்க்குமெலலார்க்கும், தாயாகித் தலையளிக்குந் தண்டுறையூர கேள். இது தரவு. காடசியாற்கலப்பெய்தி யொத்திறத்துங் கதிர்ப்பாகி, மாட்சியார்க்கரியாநமரபொத்தாய் காவினுற், பிணிநலம்பெரிசெய்தி ப் பெருங்கடந்தோள்வனப்பழிய, அணிநலந்தனியேவந்தருளுவதுமருணாமோ. அன்பிறைலநிறந்திறீ பயிசிறைப்பிரிந்தின்றிப், பொன்புனைபூணுகம் பசப்பெய்தப்பொழிலிட்டுப், பெருவளைத்தோளருளுதற்கிருளிடைத்தமியையாய்ச், சுருளைத் தோள்கதிர்ப்பிக்குங் காதலுங்காதலோ, பாங்கனையேவாயிலாப் பல்காலும்வந்தொழுகுந், தேங்காதகாவினையுந் தெளியாதவிருளிடைக்கட், குடவளைவேய்த் தோளிணைகள் கு

ளிர்ப்பிப்பான்றமியையாய்த், தடமலர்த்தாரருளு னின்றகுதியுந்தகுதியோ. இவைமூன்றுந்தாழிசை. நாதுறுமுறிசெறி தடமலரிடையிடை தழலெனவிரிவனபொழில், போதுறுநறுவிரை புதுமலர்தெரிதருகருநெய்தல் விரிவனகழி, தீதுறுதிறமறு கெனநனிமுனிவன துணையொடுபிணைவனதுறை. மூதுறுமொலிகலி நுரைதருதிரையொடு கடிதொடர் புடையதுகடல். இவைநான்கும் அராகம். கொடுந்திறலுடையன அறவேறுகோட்பதனால், இடுங்கழியிராவருஉல வேண்டாவெனவிசைத்திலமோ. கருநிறத்துறுதொழிற காமம்பெரிதுடைமையால், இருணிறத்தொருகானி லிராவாரலெனவிலமோ இவைநாற்சீரடியிரண்டம்போதரங்கம். நாணுநெகிழ்க்கன்றாற் பெண்ணராசி நலந்தகையே, துஞ்சலுமொழிந்தன்றாற் றொடித்தோளி தடங்கண்ணே, அறற்றொடுகழிந்தன்றா லிருளுமாயிழைக்கே, நயப்பொடுகழிந்தன்று னனவது கண்ணுதற்கே. இவைநாற்சீரோரடி நான்கம்போதரங்கம். அந்நிறத்தாரலசைந்தனதோள். அலர்தற்கு மெலிந்தனகண். பொய்த்துரையாற் புலர்ந்ததுமுகம். பொன்னிறத்தாற் போர்த்தனமுலை. அழலினாலசைந்தநகை அணியினாலொசிந்தஇடை. குழலினாலிமிர்ந்ததுமுடி. குறையினாற்கோடிற்றுநிறை. இவைமுச்சீரோரடி யெட்டம்போதரங்கம். உட்கொண்டதகைத்தொருபால். உலகறிக்க லைத்தொருபால். கட்கொண்டதுளித்தொருபால். கழிவெய்தும்படித்தொருபால். பரிவுறூஉந் தகைத்தொருபால். படிவுறூஉம் பசப்பொருபால். இரவுறூஉந் துயரொருபால், இளிவந்த வெளிற்றொருபால், மெலிவுறூஉந் தகையொருபால். விளர்ப்புவந்தடைந்தொருபால். பொலிவுசென்றகன்றொருபால். பொறைவந்துகூர்ந்தொருபால். காதலிற்கதிர்ப்பொருபால். கட்படாத்துயரொருபால், ஏதில்சென்றணைந்தொருபால். இயனணிப்செறிவொருபால். இவையிருசீரோரடிப் பதினாறம்போதரங்கம், எனவாங்கு தனிச்சொல். இன்னதிவ்வழக்க மித்திறமிவணல, மென்னவுரன்றுட் டென்னுயர்பிற், கலந்தவணிலைமை யாயுணர்வலந்தகக், கிளையொடுகெழீஇய தளையவிழ்கோதையைக், கற்பொடுகாணியயாமே, பொற்பொடுபொலிகநும் புணர்ச்சிதானே, இது சுரிதகம். ஆறுறுப்புங்குறைவின்றிவந்த வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா. என்னை. "அச்சொலப்பட்ட வுறுப்போடராகவடி, வைத்தடையது வண்ணகமாகும்" என்றார் காக்கைபாடினியார். வான்றளைதட் டிசைதனதாகியும் வெண்பாவினயத்தும், விசையறுசிந்தடியாலிறு மாய்விடின்வெண்கலியே-எ-து, கலித்தளை தட்டுக்கலியோசை தழுவியும், வெண்டளைதட்டு வெள்ளோசைதழுவியும் வந்து ஈற்றடி முச்சீரானிறுமெனினது வெண்கலிப்பாவென்றும், கலிவெண்பாவென்றும் வழங்கப்படும்-எ-று இன்பான்மொழியாய்-எ-து. மக

